*Seek Truth wherever you can find it, But, "Make your choice and stick to it till you reach the End."*

ஸத்யம்வத.—**Speak the Truth.**

"Hitch your Wagon to a Star." "To Thine Own Self be True."




அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம்தத்ஸத்.] [God is Love : Knowledge is Power : *Om.*

ஸத்யமேஜெயம்—**Satyameva Jayati.**

புத்தகம் 14.] 1905-ம்வருஷ ஆகஸ்ட்டு. [சஞ்சிகை 4.

# "CHARACTER-BUILDING."

## I. Through Environment and Harmony.

"Without the regularly recurring procession of the seasons—the flux and flow of light and life—the construction and progress of the universe could not continue. The multitudinous manifestations of nature are literally dependent on the rhythmic movements of the months...... ...All that we call "Here" comprises a congregation of symbolisms of another life than this; a life out of which we came; a life into which we go. Beautifully and briefly, Cardinal Newman points this earth-phase, in *Gerontius.*, "Thou art wrapped and swathed round in dreams, some that are true yet enigmatical. For the belongings of thy present state, save through such symbols, could not come home to thee."—*Eric Hammond* on 'Environment.'

"The Self should never be lost sight of. It is the one thing of supreme importance, the greatest factor even in the life of the greatest service. BEING always and necessarily precedes DOING; HAVING always and necessarily precedes GIVING. But this law also holds: That when there is the BEING it is all the more increased by the DOING; when there is the HAVING it is all the more increased by the GIVING. *Keeping to oneself dwarfs and stultifies. Hoarding brings loss: using brings even greater gain.* In brief the more we are, the more we can do the more we have, the more we can give.

"The most truly successful, the most powerful and valuable life, then, is the life that is first founded upon this great, immutable law of love and service, and that then becomes supremely self-centered—supremely self-centered that it may become all the more supremely unself-centered; in other words the life that looks well to self, that there may be the ever greater self, in order that there may be the ever greater service.

"The individual dealing with individual is necessarily at the bottom of all true social progress. There can't be anything worthy the name without it. The truth will at once be recognised by all *that the good of the whole depends upon the good of the each, and the good of each makes the good of the whole.* Attend, then to the individual and the whole will take care of itself. Let each individual work in harmony with every other and harmony will pervade the whole. The old theory of competition—that in order to have great advancement, great progress, we must have great competition to induce it—is as false as it is savage and detrimental in its nature. We are just reaching that point where the larger men and women are beginning to see its falsity They are recognising the fact that *not competition, but co-operation, reciprocity, is the great, the true power*—to climb not by attempting to drag, to keep down one's fellows, but by aiding them, and being in turn aided by them, thus combining, and so multiplying the power of all instead of wasting a large part one against the other.

"No, not until this all-powerful principle is fully recognised, is built upon so thoroughly that the brotherhood principle, the principle of oneness can enter in, and each one recognises the fact that his own interests and welfare depend upon the interests, the welfare of each, and therefore of all, that each is but a part of the one great whole, and each one stands shoulder to shoulder in the advance forward, can we hope for any true solution of the great social problems before us, for any permanent elevation of the standard in our national life and welfare.

"The most powerful agent in character-building is this awakening to the true self, to the fact that man is a spiritual being--nay, more, that I, this very eternal I, am a spiritual being, right here and now at this very moment, with the god-powers which can be quickly called forth.

"Each individual life is a part of, and hence is one with the Infinite Life; and the highest intelligence and power belongs to each in just the degree that he recognises his oneness and lays claim to and uses it. Each person creates his own 'atmosphere'; and this atmosphere is determined by the character of the thoughts he habitually entertains."—*New Thought Notes from Trine.*

"How can I make life yield its fullest and best? How can I know the true secret of power? How can I attain to true greatness? How can I fill the whole of life with a happiness, a peace, a joy, a satisfaction that is ever rich and abiding, that ever increases, never diminishes?

"Two great laws come forward: the one that we find our own lives in losing them in the service of others—love to the fellow man; the other, that all life is one with, is part of the Infinite Life, that we are not material but spiritual beings,—spiritual beings here and now, and a living as such, which brings us in turn to a realisation of the higher, the God-self, thus bringing us into the realm of all peace, all power, and all plenty,— that is Love to God."—*Ibid.*

# "மதிவளர்வித்தை," அல்லது, ஸ்ரீவித்தை.

## பெற்றோர், பிரதமவித்தியாபோதகாசிரியர்களுக்கு.

### I. சங்கம், சாந்தம், — சகவாச உபவாசபலன்.

"மதிவளர்காதலி."

"தசமியிலே சாகரத்துக்கப்பாலேறிச் சிலம்பொலியு முனதுடைய [இருக்கால்கண்டு
நிசமாகஸ்தூல சூக்ஷ்மத்தில் தோன்றி
நிஷ்களத்தில் நீயுநானு மொன்றேயாகி
அறிவில்லா ஆனந்தமயமேயாகி
அருள்வெளியாய் வரமருள்வா யகண்டரூபி!
சுசிவழியாய் சுசிமுகமாய்ப் பிள்ளைமுகம் பார்த்தாள்வாய்!
சோதியே மனோன் மணியே சுதினவாழ்வே!"

இவ்விராஜதானியில் பிள்ளைமிடிதீர்க்கவந்த பெருந்தவப்புத்திரர்களாம் இளஞ்
சிறுவர்களுக்குப் புத்திவிர்த்தியாகும்படி பிரதமவித்யாபோதனை செய்ய நூதனமாய்ச்
செய்துள்ள ஏற்பாட்டில் பிரதமவித்தியாபோதகாசிரியர்கள் அவரவரும் தமது புத்தி
யுக்தியை உபயோகித்துப் பிள்ளைகளுக்கு நல்விர்த்தியுண்டாகும்படிப் போதிக்க வேண்டு
மட்டும் இடங்கொடுக்கப் பெற்றிருக்கிறார்களென்று கேட்கச் சந்தோஷமாயிற்று. அவர்க
ளுக்கு குழந்தைகளுக்கு வித்தியாபோதனை செய்யும்படி வாய்த்தபாக்கியமே பாக்கியம்.
ஆனால் இக்காலத்து பிரதமஉபாத்தியாயர்கள் பூர்வவாசனையுமின்றி புதிய நாகரிகமுதிர்
பயிர்ச்சியுமின்றி ஏட்டுப்படிப்பும் அற்பமாய்க்கற்று அதைக்கொண்டு சொற்பஜீவனம்செய்து
வருகிறவர்களென்று பலரும் வெளிப்படையாகச் சொல்லிவருகிறார்கள். ஆயினும் பிரதம
பாடசாலை உபாத்தியாயர்கள் சிலர் இந்த விவேகசிந்தாமணிக்கு எழுதிவரும் விஷயங்களின்
நயத்தைக்கொண்டு, அவர்கள் அங்கிலேயபாஷைப்படிப்பிலும் அவர்களது நூதனமுறைக
ளிலும் அவ்வளவாகப் பயின்றவர்க ளில்லாவிடினும், நம்மவர்கள் பூர்வதர்மத்திலும் புனித
மான பிரம்மவித்தையிலும் அனுபவ மில்லாவிட்டாலும் உண்மையாக வுணர்ந்துகொள்ள
ஆஸ்தைமிருந்தவர்களா யிருப்பதோடு, கிராகியசக்தியும் அவ்வளவு சூந்நியமல்லவென்று
எண்ணுகிறோம். ஆகையால் இவர்களுக்கு "மதிவளர்வித்தையாம்" ஸ்ரீவித்தை யப்பியா
சத்தைப்பற்றிச் சிறிதுசொல்ல நினைந்தோம். ஸ்ரீவித்தை யென்பது உண்மையாக இங்கிலீ
ஷில் "Nature Study" என்று சொல்லும் பிரகிருதிசாஸ்திரத்தைப் பூரணமாய் ஆய்ந்து
தேர்ந்து ஆத்மானுபவம்வரையில் கொண்டுபோய் முடித்ததோர் அருமையாம் வித்தையன்றி
வேறல்ல. பிரகிருதிசாஸ்திரம் போதிக்கிறேன் என்று கத்தரிக்காய், முள்ளங்கியின் இலை
களையும் வேர்களையும் காட்டிச் சிலகேள்விகள் கேட்டுவிட்டு விடுவதன்று. பிரகிருதிவஸ்து
வில் ஒன்றை யெடுத்துக்கொண்டு அதன் உண்மை இரகசியங்களை யாதியோடந்தமாய் வினவி
அதைக்கொண்டு பிரகிருதி மர்மங்களையறிந்து கொள்வதுதான் உண்மையான வித்தியாப்பியா
சம். இப்படி அறக்கற்கும் வித்தையை ஆத்மவித்தை யென்றும் ஸ்ரீவித்தையென்றும்
சொல்லி முன்னோர் போதித்திருக்கிறார்கள். இந்தவித்தை குருமுகமாகவே யறியவேண்டி
யது. ஏனென்னில் இது வெறும் ஏட்டுப்படிப்பல்ல. "எழுதாப்பொத்தகத்தின் ஏட்டின்

பொருளைத், தெருளாதகன்னி தெளிந்திருந்தோத," பக்திசிரத்தையோடுங்கூடி விநய பூர்வமாயிருந்து கற்றுக்கொள்ளும் கல்வியாம். பிரகிருதியிலுள்ள காண்பொருள் அனைத்தினுள்ளும் எள்ளினுள் எண்ணெய்போல் மறைவாயிருந்து அருவாய் அவற்றை யாட்டுவிக்கும் தத்துவங்களை தத்துவார்த்தமாக வறிந்துகொள்வது ஆத்மவித்தையாம். பிரகிருதியிலுள்ள காண்பொருள்கள் பலவற்றையும் அவற்றின் வளர்ச்சி விகாரங்களையும் தொழில்களையும் உற்றுநோக்கி விசாரித்து அவைகளைக்கொண்டு அவை சம்பந்தமாயுள்ள தத்துவங்கள் வேலை செய்யும் அதிசயங்களைக் காரியார்த்தமாக வுணர்ந்து காரணகாரிய சம்பந்தத்தைக் கிரகித்துக்கொள்வது ஸ்ரீவித்தையாம். முதலாவதை "Study of the abstract principles" என்று சொல்வர். இதையே காரணவிசார வித்தையென்று சொல்லலாம். மற்றொன்றாகிய ஸ்ரீவித்தையோ (Study of the concrete, *i.e.*, of the principles in its application to every-day life) காரிய விசார வித்தையாம். காரியத்தில் தேறினாலன்றி காரணம் விளங்காது. காரணம் விளங்கினாலன்றி காரியம் நிற்காது. காரியகாரண சம்பந்தத்தை யுள்ளபடி யுணர்ந்தறிவதே உண்மையான ஸ்ரீவித்தியாப்பியாசமாம். இந்த வித்தியாப்பியாச முறை இராமாயண மஹாபாரத இதிஹாஸங்களில் வெகு நன்றாக விளக்கிக்காட்டப்பட்டிருக்கின்றது. ஆனால் இக்காலத்தவர் அந்த முறையைக் கிரகித்துக்கொள்ளாது காலதேச வர்த்தமானங்களில் புகுந்து வேறுவிசாரம் செய்து அவ்விதிஹாஸங்கள் எழுதப்பட்டதின் முழுநோக்கத்தை யுணராது அதன் பயனை யிழந்துபோகிறார்கள். இராமலெக்ஷ்மணர்களைப்போல பிள்ளைகளும், வசிஷ்டர் விஸ்வாமித்திரர்களைப்போல போதகாசிரியர்களுமிருந்தாலல்லவோ அந்த வித்தியாப்பியாசம் பலிக்குமென்பர் சிலர். இது பெரும்பாலும் சுயபுத்தியால் சொல்லும் ஆக்ஷேபனையன்று; இரவல் புத்திகொண்டு செய்யும் ஆக்ஷேபனையென்று தெரியும். ஆயினும் அதற்கும் ஒருவரியில் சமாதானம் சொல்வோம். அவர்கள் அவதார புருஷர்களானாலும், நம்மைப்போல் நரர்களாக அவதரித்து நாமனுபவிக்கும் சம்சார விபவகாராதிகளில் புகுந்து அதில் வரும் சுகதுக்கங்களைப் பொறுத்து நல்வழியிலிருந்து நற்கதியடையும் வழி காட்டவேன்றே தங்களுடைய சக்திகளையெல்லாம் விட்டு நரதேகமெடுத்து நல்வழி காட்டவந்தார்கள். மனிதப்பிறவியில் பிறந்த ஒருவனாலானது அதே பிறவியில் பிறந்த ஒவ்வொருவனாலும் ஆகும். சாதகசாதனசாத்திய பேதங்களால் முன்பின்னாக மாறிவரும். மகாதீரன் ஒரு நொடியில் செய்வதை மகாமந்தன் ஒரு யுகத்தில் செய்கிறான்—என்று வேண்டுமானால் வைத்துக்கொள்வோம். இதில் காலதேச வர்த்தமானங்களால் வித்தியாசமன்றி வேறல்ல. உண்மையே எப்போதும் காலதேச வர்த்தமானங்களுக் கெட்டாததாகவிருந்து அவற்றைத் தனக்குட்பட்ட உபகரணங்களாக உபயோகித்து வருகிறது. ஆகையால் எவ்வாற்றானும் ஆத்ம தத்துவத்தை யறிந்து கொள்ளவேண்டியது முதலவசியம். இந்த ஆத்மவித்தை எல்லா வித்தைகளிலும மேலாகக் காரியத்துக்கு அவசியமான வித்தையாக விருக்கிறது. இந்த வித்தை பயில முயலாத ஜன்மம் மனுஷ ஜன்மத்தோடு சேர்த்தியல்ல. மிருகஜன்மங்கள் மானுடரூபமெடுத்துவிட்டதாகவே சொல்லல்வேண்டும். இந்த ஆத்மவித்தைக்கு உசிதமான சாதனம் ஸ்ரீவித்தை. "தொட்டுக் காட்டாத வித்தை சுட்டுப்போட்டாலும் வராது" என்றிருப்பதால், உண்மையை யுணரவேண்டி விசாரம் செய்பவர்களும் வித்தியாப்பியாசிகளும் பக்தி சிரத்தையோடும் வணக்க ஒடுக்கத்தோடும் ஆசானைத் தன் முன்னறிதெய்வமாக வழிபட்டுக்

கேட்கவேண்டும். பக்தி விசுவாசமும் ஒழுக்க வணக்கமும் இல்லாவிட்டால், 'ஸ்ரீவித்தை' 'பேய்வித்தை'யாகப் போய்விடும். சன்மார்க்கத்தை விட்டு விலக நேரிடும். சன்மார்க்கத்தை விட்டு விலகினாலோ அதோகதியன்றி வேறுகதியில்லையென்பது நிச்சயம். ஆகையால் சன்மார்க்கம் தவறாதிருக்க, ஐந்துவயதுக் குழந்தைக்கும் வித்தியாரம்பம் செய்யும்பொழுது முதலில் அக்ஷராப்பியாசம் பகவந்நாமமும் பகவத்பக்தியுமே. "ஹரி: ஓம் நமோ நாராயணாயஸித்தம்" என்று ஓதிவிட்டுத்தான் அ, ஆ, என்கிற அக்ஷரங்களைத் துவக்கவேண்டும். குழந்தைகள் தேவதாஸ்வரூபமாதலால், அவர்களுக்கு தெய்வவணக்கம் இயற்கையாகவே யமைந்துவரும். இயற்கையாவுள்ள அந்த சுபவாசனையை நாம் செயற்கையால் மாற்றாது அதற்கு விர்த்தியுண்டாகி வளரும்படி செய்யவேண்டியது பெற்றோர் போதகர் எல்லாருடைய முதற்கடமையாக விருக்கிறது. இக்கடமையைச் செய்யத்தவறுகிறவர்கள் கர்மப்பிரஷ்டர்களாய் தங்களிடம் ஒப்புவிக்கப்பட்ட குழந்தைகளுக்கும், தங்களுக்கும், தங்கள் தேசத்துக்கும், அரசுக்கும், தெய்வத்துக்குமே பெரும்பிழை செய்த அபராதிகளாகிறார்கள். எதையும் பக்தி சிரத்தையோடு விநயபூர்வகமாய் விசாரிக்கும் மனோதர்மம் இளம்பிராயத்தில் நம்முடைய தவறுதலால் குழந்தைகளுக்கு அற்றுப்போனால் அவர்கள் உயிர்வாழ்க்கை முழுவதும் காலொடிந்த முடங்களாக வழி நடக்க வேண்டிவரும். பக்தி சிரத்தையிரண்டும் மனது நல்ல வழியிற் செல்ல அது உண்மையில் ஊன்றி நடக்கும் இரண்டு கால்களாக விருக்கின்றன. இப்படி மனதின் காலை யொடிப்பதைவிட உடம்பின காலை யொடித்துப்போட்டாலும் பாதகமில்லை. ஏனென்றால் அமெரிக்கா தேசத்தில் பிறவிக்குருடாகவும் செவிடாகவும் ஊமையாகவும் பிறந்த மிஸ் ஹெலன் கெல்லர் என்னும் மாது உணர்வு நுகர்விரண்டு தவிர ஞானேந்திரியங்களெல்லாமின்றியே பிறந்தும் நல்ல ஞானோதயமாய் எழுதவும் வாசிக்கவும், தத்துவஞான விசாரம் செய்து உண்மையை யுணர்ந்து உள்ளன்பு நிறைந்து கடவுளைத் தொழுது வணங்கவும், அதனால் தன்வாழ்க்கை தனக்குப் பேரானந்தங் கொடுப்பதாக முடியவும் நேரிட்டிருக்கிறதென்று அப்பெண்மணியே சாக்ஷிபகர்ந்து ஜகமறியத் தனது மனநிறைவை வெளிப்படுத்தி யெழுதியிருக்கிறாள். ஆகையால் பக்தி சிரத்தையும் வணக்க ஒழுக்கமும் குழந்தைகளுக்கு இளம்பருவத்தில் ஈசுவர கிருபையால் கிடைத்த பெருநிதியாம். இதை நாம் அபகரிக்காமலும் அவர்கள் இழக்காமலும் பார்த்துக்கொள்ளவேண்டியது பெற்றோர் போதகர் இராஜாங்கத்தார் எல்லாரையும் பொறுத்த முதற்கடமையாக விருக்கிறது. ஸத்சங்க விசேஷத்தால் நற்குணங்களெல்லாம் தானேவளரும். துர்ச்சங்க விசேஷத்தால் நற்குணமும் துர்க்குணமாய் மாறும். இந்த மனோதர்மத்தை எல்லாருமறிந்து மனதிலிருத்தவேண்டியது முதற்கடமை. இதைத்தான் "Environment" என்று ஆங்கிலேயதத்துவநூலில் சொல்வார்கள்.

"தனக்குத் தானே பகைவனும் நட்டானும்" என்பது திருமந்திரமாயினும், "மக்களுக்குச் சத்துரு மாதாபிதா" என்பதும் ஒருவிதத்திலுண்மையே. ஏனென்றால், இவர்களுடைய அஞ்ஞான அந்தகார ஆசையினால் குழந்தைகளுடைய சுபவாசனைகளனேகம் வளர்வதற்கு வழியின்றி (for want of suitable environment for their growth) க்ஷயமாய்ப் போவதன்றி, இவர்களுடைய பழக்கவிசேஷத்தால் துர்வாசனைகளும் படிகின்றன. இவை பின்

னுக்கு அக்குழந்தைகள் குணத்தைக்கெடுத்துப் பெருவலிகொண்டு, போக்குவதற்குக் கஷ்டமாய் முடியும். "தொட்டிற்பழக்கம் சுடுகாடுமட்டும்" என்பது பெரும்பான்மையர் விஷயத்தில் உண்மையாகவே முடிகிறது. அஃதோடுபோகாமல் மறுபிறப்பிலும் தொடர்ந்து சூக்ஷ்மவாசனையாகவிருந்து பிராணனை வதைக்கும். ஆகையால் குழந்தைகள் மனம் கெடாதபடி ஈசுவரசாக்ஷியாகவிருந்து நாம் பாதுகாக்கவேண்டும். மனத்தை யார்கண்டார்? அது வெள்ளையா கறுப்பா அல்லது சிகப்பாவென்றுகூடத் தெரியாதே! மனதைக் கெடுக்காமல் பாதுகாக்க வேண்டுமென்று சொன்னால் அது எப்படியென்று பலர் கேட்பார்கள். பதினைந்துவயதில் ப்ரைமெரிபரீக்ஷை கொடுத்துவிட்டு டிரெயினிங் ஸ்கூலில் தர்பீது செய்யப்பெற்று செர்டிபிகேட்டுப் பெற்றவர்களுக்கு இன்ஸ்பெக்டிங் ஆபீஸர்கள் எப்படிச் சொல்வார்களோ நமக்குத் தெரியாது. அவர்கள் ஆணோடுபெண்ணோடு பிறந்து வளர்ந்தவர்களானால் அவர்கள் தாயார் கைக்குழந்தையைப் பாதுகாக்கும் வழியின் மர்மத்தை யறியக்கூடுமானால் அவர்களுக்கு இதுவும் தெரியும். பிள்ளைபெற்ற புருஷர்களானால் தாயன்பு அவர்களுக்கு ஈசுவரியாக வுள்ளிருந்துபோதிக்கும். பலபிள்ளைகளைப் பெற்று பவித்திரமாய்வளர்த்த தாயாம் ஒரு புண்ணியவதியை அவள் நிரக்ஷரகுக்ஷியாக விருப்பதுகண்டு, "அம்மா உங்களுக்கு பிறர்மனதையறியும் சக்தி விசேஷமாயிருக்கிறதே யெப்படிவந்தது?" என்று கேட்டேன். அந்தம்மாள் அதற்கு பதில்சொல்லத் தர்க்கவாதம் தொடர்ந்திலள்; தத்துவஞானம் பேசிலள்; ஆனால் அவள் அனுபவத்தை யவளுணர்ந்தபடி வெகு சுருக்கமாக வெட்டிப்போட்டாற்போல் சொன்னாள். அவர் சொன்னபதில் என்னவெனில்: "அப்பா அது நன்றாகத் தெரியும். ஏனென்றால் மனத்துக்கு மனம் சாக்ஷி. அது தனக்குத் தானே சொல்லும்." இந்த வுண்மையையுணர்ந்த பெண்மணிகளால் தான் இவ்வாரியதேசம் எல்லாமிழந்தும் அதன் உண்மைப்பெருமையை யிழக்காதிருக்கிறது. தத்துவவிசாரஞ்செய்து கைகண்ட ஞானிகளும் "அதுவானால் அதுவே சொல்லும்" என்று சொன்னதன்றி வேறு சொல்ல வாயெட்டாது விட்டனர். "கொக்கென்று நினைத்தனையோ கொங்கணவா" என்றுகேட்ட பதிவிரதா சிரோமணியின் பரிபக்குவம் மிகுந்த இந்நற்றாயும் அவள் தாயன்பு மிகுதியால் மனோதத்துவத்தை யனுபவபூர்வகமாக வறிந்து "மனத்துக்கு மனம் சாக்ஷி"—'மனமானால் மனமே சொல்லும்' என்று மனதின் ஏகத்துவத்தையுணர்ந்து அவரறியாது அத்துவிதம் பேசினார். இப்படி நிரக்ஷரகுக்ஷிகளாகவிருக்கும் தாய்மாருக்குள்ள புத்திவன்மையைக்கண்டு அவரை மதித்துக்கொண்டாடவாவது தெரியுமா இக்காலத்துப் பிள்ளைகளுக்கு? "குணநாடி குற்றமுநாடி மிகைநாடி மிக்ககொளல்" என்னும் திருக்குறளைத் திண்ணைப் பள்ளிக்கூடத்தில் வாசித்த சுவடிகளோடுகட்டி பதினெட்டாம்பேர் வெள்ளத்தில் ஆற்றோடு விட்டுவிட்டு அவர்களுக்குப் புருஷர்களது கெட்ட சகவாசத்தால் படிந்துள்ள துர்வழக்கங்களையே திருத்தவும் பார்க்காமல் எடுத்துத்தூற்றி ஏளனம்செய்து தாம் கல்லூரிசென்று "கற்றவித்தையைப் பெற்றவளிடம் காட்டி" தற்பெருமைகொண்டாடும் மூடமதிகளாயிருக்கிறார்கள். இப்படி குணத்தைக் கிரகித்துக் குற்றத்தை நீக்கும் தன்மையும் குழந்தைகளுக்கு இயற்கையாகவே யமைந்துள்ளது. இதற்குச் சாக்ஷி அவர்களிடத்தில் விசேஷமா யமைந்துள்ள சாந்தகுணமேயாம். சந்தோஷமின்றி சாந்த முண்டாகாது. சாந்தமில்லாவிடத்துச் சந்தோஷம் தரித்து நிற்காது. குழந்தைகள் இயல்பாய் சந்தோஷமுள்ளவர்களா யிருப்பது அகம்புற

மிரண்டும் அவர்களிடத்துப் பாலும்நீரும்போல் எளிதிற்கலந்துநிற்பதால் வருவதாம். இதை "Easy adaptability to environment" என்பர். இந்த வுண்மையையே ஔவையார் "உலகத்தோடொத்து வாழ்" என்று சொன்னார். 'உலகத்தோடு'—புறப்பொருளாம் பிரபஞ்சஸ்வபாவத்தோடு அகப்பொருளாம் ஆத்மா "ஒத்து" நின்றாலன்றி "வாழ்வு" என்பதில்லை. இரேழுலோகத்தோடும் ஒத்துவாழுந் தன்மை பெறுவதே ஜீவன்முத்திதெசையாம். ஆலம்வித்து சிறியதாயிருந்தாலும் "அண்ணல்தேர் புரவி ஆட்பெரும்படையுடன் அரசர்க்கிருக்க நிழலாகும்" பெருவிருக்ஷமாக வளரும். குழந்தைகளிடத்துள்ள இந்த "ஒத்துவாழும்" தன்மை பங்கமுறாமல் பாதுகாக்கப்படின் இது பிந்தி எல்லாப்பயனையும் கொடுக்கும்: புருஷார்த்தம் நான்கும் தரும் கற்பகத்தருவின் வித்தாகும். "போதுமென்னும் மனதே பொன்செய்யு மருந்து." திருப்தி, பொறுமை, சந்தோஷம், சாந்தம், ஆகிய இந்நான்குக்கும் வித்தாம் குணம் குழந்தைகளிடத்தில் சுபாவமாக அமைந்திருக்கிறது. இது வீணையும் குரலும் ஒத்து அமிர்தரஸம் பொழியும் கானத்தை யுண்டுபண்ணுவதுபோல், புறப்பொருளாம் பிரபஞ்சத்தோடொத்து வாழும் அகப்பொருளாம் ஆனந்தரஸம் பொழியும் ஆத்மதத்துவம். இது குழந்தைகளிடத்தில் விசேஷமாயுண்டு. ஆகையினால்தான் ஐந்துவயசுவரையில் குழந்தைகள் பிரம்மஸ்வரூபமென்று சொல்லிக் கொண்டாடுவது. ஐந்து வயதுக்குமேல் பூர்வகர்மவாசனையாலுள்ள அஜ்ஞானவிருத்தி யாரம்ப தெசையாதலால், அப்பொழுது அந்த பூர்வவாசனையின் பலனைக் குறைத்துக்கெடுக்க அக்ஷராப்பியாசம் செய்ய வித்தியாரம்பம்செய்கிறோம். பகிர்முகத்தில் எழுத்துக்களைக் கற்றுக்கொள்ளப் பழகுவதுபோல், அகமுகத்தில் அழியாததாயுள்ள வஸ்துவாம் வித்தியாதத்துவத்தை நம்பிக்கையினாலும் பெரியோர் வாசனையாலும் பழக்கத்தாலும் அப்பியாசம் செய்யப் பழக்கவேண்டுமென்பது பூர்வந்தொட்டு இப்புண்ணிய பூமியில் ஏற்பட்ட தர்மம். இதற்குங் குறைவுவராமல் பார்த்துக்கொள்ள வேண்டியது பெற்றோர் போதகர்களின் பெருங் கடமையாம்.

இவ்விரண்டும் எல்லாவித்தைக்கும் மூலாதாரமாக அமைந்துள்ளன. கருப்பாசயத்திலிருக்குங் காலமுதல் இதற்குவேண்டிய சாதகசாதனங்களை யனுஷ்டிக்கவேண்டியது ஸத்புத்திரசம்பத்தை யிச்சிப்பவர்கள் கடமையாம். பெற்றபின் அவர்களுக்கு இயற்கையாயுள்ள ஸத்வகுணங்கெடாதபடி பாதுகாத்து வரவேண்டியது அவசியம். குழந்தைகளுக்கு அவர்களின் நிஷ்களங்கத் தன்மையினால் பிறர் குணங்களைக் கிரகித்துக்கொள்ளும் சக்தி மிகுதியாகையால் இது வாச்சா உபதேசத்தால் மட்டும் பலிக்காது. பெற்றோரும் போதகாசிரியரும் அவர்கள் நடத்தையாலும் ஒழுக்கத்தாலும் குழந்தைகளுக்கு "முன்னறிதெய்வமாக" விருந்து நடந்துகொள்ள வேண்டும். இந்த இரண்டு தத்துவங்களையும் மேற்றிசையில் மேலானோர் இப்பொழுதுதான் காணத் தலைப்பட்டிருக்கிறார்கள். இத்தேசத்தில் இது தொன்றுதொட்டு வழங்கிவந்து நடுவில் நழுவவிட்ட வழக்கமாயிருப்பதால் சீக்கிரத்தில் திரும்பி அப்பியாசத்துக்குக் கொண்டுவருவது சாத்தியமாம். இவ்விரண்டு சாதனங்களும் இளம்பருவத்தே யமையப்பெற்றாலன்றி ஜனக்ஷேமமாவது தேசக்ஷேமமாவது உள்ளபடி வாய்ப்பது துர்லபமாதலால், இவ்விரண்டையும் விசேஷமாக வெடுத்து வற்புறுத்திக் கூறலானோம். இந்த வுண்மையை மேற்றிசையாரில் மேலானோர் கிரகித்து வருகிறார்களென்பதற்குதாரணமாக இதன் முகப்

யில் இதேகருத்தடங்கிய அவர்கள் மொழிகளை "பிரபுத்தபாரதா" என்னும் பத்திரிகைக்கு மேற்றிசையிலிருந்து இருவர் எழுதியவற்றி லிருந்தெடுத்துப் பிரசுரித்திருக்கிறோம். இக்காலத்தில் 'மேற்றிசையார் வாலைப்பிடித்துக்கொண்டு போனால்தான் மோக்ஷம்' என்கிற நம்பிக்கை வலுத்திருப்பதால் நாமும் அந்தப் பசுவின்வாலைப் பிடித்துக்கொண்டே கரையேறப் பார்ப்போமென்று இருதிசையார் எண்ணத்தையும் நுட்பமா யாராய்ந்து ஒத்துவருவதை யொப்பிட்டுக் காட்டிக்காட்டி யெழுதிவருகிறோம். வெள்ளைக்காரர்கள் இம்முயற்சியை நன்குமதித்து நலம் பாராட்டினாலும் இங்கிலீஷ் படித்து விட்டதினாலேயே துரைமார்களாய் விட்ட நம்மவர்கள் கவனத்தையுங் கவருவது கஷ்டமாயிருக்கிறது! ஆகையால் பிரதமபோதகாசிரியர்களும் பெற்றோரும் கவனிக்கவேண்டிய சிலமங்களை யவர்களுக்கு நேரில் சொல்லி வற்புறுத்தலானோம்.

இங்கே நம்மவருள் சாதாரணமாக வழங்கிவரும் ஒருபெருந் தப்பெண்ணத்தைத் திருத்தவேண்டியவசியம். வேதாந்தஞானம், ஸ்ரீவித்தை யப்பியாசம் இவையெல்லாம் செத்தபிறகு கதிமோக்ஷம் பெறுவதற்கேயன்றி இகத்திற்குபயோகமில்லை யென்கிற தப்பெண்ணம் மிகவும் கண்டிக்கப்படத்தக்கது. இந்த தேகமெடுத்தது பூர்வஜன்மகர்மத்தாலென்பது உண்மையாயினும், பூர்வத்தில் நாம் செய்தகர்மத்தை இப்போது மாற்றமுடியாதென்பது ஸத்யமாயினும், அதன்பலனை வெகுவாகத் தன் முயற்சியாலும் உளவறிந்து உண்மையாக வுழைப்பதாலும் மாற்றிவிடலாமென்பது மட்டுமல்ல; அனேகமாய் வென்றுவிடலாமென்பது அநுபவரீதியாய்க் கண்ட ஸத்யம். அன்றி இந்ததேகம் இருக்கையிலேயே இத்தேகபாவனையை விட்டு (கர்மம் வெகுளி யிவற்றின் வேகத்தாலுண்டான தாபத்தையும் பொறுமை முதலிய ஷட்குணபாவங்களையும் விட்டு) மெய்யறிவே இருப்பிடம் சுகிப்பிடம், விளையாட்டிடமாகவுங் கொண்டு பொருந்தியிருப்பவரே பெறத்தகும் பேரின்பம் விடாத முக்த புருஷர்களாமென்பது பகவத்கீதையில் ஸ்ரீகிருஷ்ணபகவான் போதித்துள்ள தர்மத்தின் மர்மம். ஐந்தாவதாம் கரும ஸந்நியாசயோக † அத்தியாயத்தில் மேற்கண்ட கருத்தை யுபதேசித்துள்ள பாட்டுகளிரண்டை, பழைய பகவத்கீதை மொழிபெயர்ப்புக் கிரந்தமொன்றிலிருந்தெடுத்துக் கீழே வரைகிறோம்:—

"உடம்புடனே யுளனாகியிருந்தே
விடம்புரைகாம வெகுளியின்வேகச்[1]
சடம்பொறையாமை தவிர்ந்தவனே நல்
விடம்புகு ஞானியு மின்புறுவானும்."

"மெய்யறிவே விளை யின்பமதாகவும்
மெய்யறிவே விளையாடிடமாகவும்
மெய்யறிவே யொளியாகவு மேவார்[2]
மெய்யறிவே பெறுமின்பம் விடாதார்."

ஓம் தத்ஸத். ஸத்யாநந்த:

† ஸந்நியாசி யென்கிற பதத்திற்கு அருத்தம் சங்கல்பவேறறுத்தவன் என்பது பொருள். எல்லாவற்றிலும் எண்ணம் வெல்லவரிதாதலால் அதை வென்ற மஹாதீரன், சங்கற்பமாத்திரத்தாலுற்பத்தியான பிரபஞ்சாதி எல்லாவற்றையும் வென்றவனாகிறான. இவ்வுண்மையை மேற்றிசையார் உணர்ந்துவர நாம் மறந்துவருவது ஒன்றே நமக்குப் பெருங்கேடு விளைப்பதாயிருக்கிறது.

1. காமம் வெகுளியின் வேகத்தாலுண்டாய. Comp. 'காமோகாருஷீன் மந்யுகாருஷீன் நமோநம:' பொறையாமை: பொறுமை முதலிய அறுபகைகள்.

2. மெய்யறிவாலடையப்பெறு மின்பம்பெற்று இடையறாதனுபவிப்பார் மெய்யறிவே யெல்லாவற்றிற்கு மேற்றவிடமாகப் பொருந்தி நிற்பார்.

# "The Reveries of a Bachelor"

(By A Confirmed Bachelor.)

## ஓர் பிரமசாரியின் மனோராஜ்ஜியங்கள்.

(FROM IK MARVEL'S "REVERIES OF A BACHELOR.")

### II. ஜ்வாலை—என்றால் சந்தோஷம்.

*Symbology : Objective*-Flame! *Subjective*-Happiness.

நான் உடனே நாற்காலியைக் கொஞ்சம் பின்தள்ளிக்கொண்டு இன்னொரு நாற்காலியை இழுத்து அதிற் காலைப்போட்டுக்கொண்டு, முழங்கைகளை நாற்காலியின் கைகளில் ஊன்றி முகத்தைச் சாய்த்து இடதுகையால் தாங்கிக்கொண்டு குதித்துக் கூத்தாடும் அந்த ஜ்வாலையை உற்றுப்பார்த்து யோசித்தேன்:— "அன்பென்பதும் ஓர் ஜ்வாலைதான்" (அறை முழுவதும் நன்றாய்த் திரும்பிப் பார்த்தேன்) "இந்தஜ்வாலை என்பது ஒருவன் வீட்டைஎப்படி பிரகாசிப்பிக்கிறதுபார். அன்பும் இப்படித்தான். பகலெல்லாம் ஓடியாடித்திரிந்து பொழுது போனதும் வீட்டிற்குள் நுழையும் போது, அன்புகூர்ந்த பார்வையுடன் வாவென்றழைக்க ஒரு இல்லாள் இல்லாமற் போனால், அவ்வீடு இருள் நிறைந்த பாழ்வீடே. "பாழே மடக்கொடி யில்லாமனை" என்றேங்கினேன்.

உடனே நாயை "பாட்சா, பாட்சா" என்று வெளிச்சத்திலழைத்து "நீ நல்ல பையன் பாட்சா" என்று அதைத்தட்டி தடவிக்கொடுத்தேன். அது வாலையாட்டித் தன்முகத்தை என் முழங்கால்மேல் வைத்து,என் முகத்தை ஆவலுடன் உற்றுப்பார்த்து,பிறகு கொஞ்சம் அப்பால்போய் என்னைத் திரும்பிப்பார்த்து விட்டுப் படுத்துக்கொண்டு உறங்கிவிட்டது.

சே! என்ன இருந்தாலும் மிருகம் மனுஷனாகுமா? ஒருவன் ஆயுள் முழுவதும் ஒரு நாயினிடத்து மட்டும் அன்புபாராட்டிச்சுகித்திருக்க முடியுமா? இப்பொழுது அந்த அந்த நாற்காலியில் (கால்போட்டுக்கொண்டிருக்கிறேனே அதல்ல, வலதுகைப்பக்கத்திலிருக்கிறதே அதில்) கனவிற்கண்ட உருவமே நனவிற்றோன்றினாற்போல் இனியபார்வையுடன் கூடின ஓர் அழகிய மடந்தை நமது பக்கத்தில் நெருங்கி உட்கார்ந்து தனது மிருதுவான சிறுகால்களை அனலுக்கு நேராக நீட்டிக்கொண்டு, கண்ணாடி போல் பிரகாசிக்கும் அவளது நெற்றியிலிருந்து மெல்லிய வகிடு பிரித்து வாரிச் சடைபின்னியிருக்கும் கருங்கூந்தல்களோடும், கழுத்தை அனுசரித்துத்துவண்டு வளையும் மின்னற்கொடிபோன்ற பொற்சரடு பூட்டப் பெற்றவளாய்—நாற்காலிக்குப் பின்புறமாய் நமதுவலதுகையை அவள் தோள்மேல் கூசாமற்போட்டு அவள் கூந்தல்களைத்தொட்டு நாம்விளையாடவும், எங்களைப் பிடித்துவிடு பார்ப்போமென்று பரிகாசம் செய்வதுபோல் சமீபத்தில் வந்து நிற்கும் அவளுடைய மெல்லிய சிறுவிரல்களை நமது இடதுகையால் பற்றிக்கொண்டு, பொழுது போவது தெரியாமலும், கேட்பாரற்று பிதற்றிக் கொண்டிருக்கும் குளிர்காற்றைச்சற்றும் கவனியாமலும், இந்த அனல்வெளிச்சத்தில் கண்ணொடு கண்ணைக்கலந்து மிருதுவாய்ப் பேசிக்கொண்டிருக்கவும், நமக்கு அதிகாரம் கொடுப்பாளானால்—(அதாவது, சாதாரணத் தமிழில், நாம் பிர்மச்சாரியாயிராமல் நமக்கும் ஒரு சிறுபெண், மனைவியென்று வாய்த்திருக்கும் பக்ஷத்தில்)—இப்படி அநாதைபோல் குளிரக் குளிர ஒன்றியாய் "எத்தனை விறகு எரிந்தாய்விட்டது, நமது சாயை எவ்வளவு தூரம் அடிக்கிறது" என்று யோசித்துக்கொண்டு இரவைக்கழிப்பதைக் காட்டிலும் இவ்வேளைக்கு எவ்வளவு இன்பமாயிருக்கலாம்.

மேலும் இப்பேர்ப்பட்ட சமயத்தில் நம் மனதிலுதிக்கும் எண்ணிறந்த எண்ணங்களையெல்லாம் நாம் சொல்லச் செவிகொடுத்துக் கேட்டுக்கொண்டும், சொல்வது நாமாதலால் அலுக்காமல் செவிகொடுத்தும், எப்பொழுதும் நாம் சொல்வதில் குற்றங்களைத் தள்ளிக் குணங்களை ஸ்தோத்திரம் செய்வதே தொழிலாகக் கங்கணங் கட்டிக்கொண்டும், அழுக்கடைந்து இருள்மூண்டு கிடக்கும் நம்மனதை விறகு வெளிச்சத்தினால் மட்டுமல்லாது தனது அன்புநிறைந்த மந்தஹாசத்தினால் துலக்கிக்கொண்டும், ஓர் பெண்மணி நம்பக்கத்திலேயே எப்பொழுதும் இருக்கும் பட்சத்தில், இப்படி நாய்கூடத்,தூங்கிப்போன பிறகு நாம்மட்டும் ஏக்கம்பிடித்து பிரம்மஹத்தி

போல தனியாய் மனம் புழுங்குவதைக்காட்டி லும் எவ்வளவு மேலாயிராது.

இதுவரையில் ஒருவர் மனதிலும் படாத ஒரு அருமையான எண்ணம் திடீரென்று நம் மனதில் உதித்தால் அதை நமக்கு நாமே சொல்லிக்கொள்வது போல், உடல் வேறு உயிரொன்ருகவிருக்கும் அவ்வருமைக்காத லின் காதிற் சொல்லி, அது அவள் மனதைக் கவர்ந்து, நிமிஷத்துக்குநிமிஷம் வளர்ந்து, அ கத்தினழகு முகத்தில் தெரியுமென்பதுபோல் ஜன்னல்களாகிற கண்கள் வழியாய் அவளது முகத்தில் பிரகாசிப்பதைப் பார்த்து, முதலில் அது நம்மனதிலுதித்தபோது நாமடைந்த ஆனந்தத்தை இன்னொருதரம் அவள் மூல மாக நாம் அனுபவிக்கும் பக்ஷத்தில்—ஏகாந்த மாய் நம்மனதிலேயே உதித்து பிறருக்குப யோகமில்லாமல் அங்கேயே யவ்வெண்ணம் மடிவதைக் காட்டிலும் எவ்வளவு மேலானதா யிருக்கும்?

சிலசமயத்தில் நம்மையறியாமல் நமது உளம்பூரித்து அன்பு பெருகும்போது, அன்பே யுருவாயிருக்கும் இன்னுயிர்க்காதலியினிடத்தில் பிரியவசனங்கள் பேசி அவ்வன்பைச் செலுத்தாமல், நாயைக்கட்டி முத்தமிட்டு படுத்துத் தூங்கவேண்டு மென்ருல் யாருக்குத்தான் சம்மதமா யிருக்கும்?

நம்மனதாகிற உத்தியானத்தில்பரோபகார சிந்தைகளாகிற பூஞ்செடிகள் அவள் அன்பு நீர் வார்த்து வளர்க்க எவ்வளவு பரிமளமாகப் புஷ்பிக்கும்? அவள் காற்றுப் பட்டாலே சுயாபிமான எண்ணங்களெல்லாம் மறந்துபோம், அவளது சாந்தமான முகத்தையும் கபடமே யறியாத பார்வையையும் கண்டவுடனே பொய் புனைசுருட்டெல்லாம் நடுங்கிப்போம். அவள் சமீபத்திலிருந்தாலே நமக்கு முகத்திலொரு களையும் தேகத்திலொரு பலமும் நம்மனதிற்கொரு உற்சாக சக்தியும் உண்டாய்விடும் என்று எண்ணினேன்.

ஜ்வாலை விர்த்தியாகி அனல் அதிகமாய் அடிக்கவே நான் நாற்காலியை நடு அறைக்கு நகர்த்திக் கொண்டேன். அவ்வெளிச்சத்தினுலுண்டான நிழல்கள் சுவற்றிலும் கூரையிலும் குதித்துக் கூத்தாடின.

இதழ்பிரியும் அரும்பு போன்ற யௌவனப் பருவத்தில் சிரித்து விளையாடும் ஸ்திரீ ஜாதியின் மனோஹர்ம லீலைகளை ஆனந்தமாய்க் கவனித்துக் கொண்டிருந்தாலே நமது புத்தி கூர்மையாகி, மனோதர்ம சக்தி அதிகரித்து, சன்மார்க்கத்திற் சென்று ஏராளமாய்ப் பலன் கொடுக்கும். நம்முடைய ஹிருதயத்தில் ஒட்ட வைத்ததுபோல் இன்னொரு இருதயம் வளர்ந்து எப்பொழுதும் நம்மை உத்ஸகப் படுத்திக் கொண்டும் நமது க்ஷேமத்துக்காகப் பிரார்த்தித்துக்கொண்டு மிருக்குமேயனுல் நாம் எவ்வளவு உழைக்கவேண்டியிருந்தாலும் உழைப்பின் சிரமம் தோற்றுமா? தனியே கிடந்து வாடிக்கொண்டிருக்கும் நம்பேலியர், கவலையென்றும், வேலைத்தொந்திரவென்றும், மனதுக்கு சுகமில்லையென்றும் செல்லிக்கொண்டிருக்கும் இருள்களெல்லம் அவள் முகத்திலுதிக்கும் கருணை கூர்ந்த புன்சிரிப்பின் வெளிச்சத்தில் இருந்தவிடந்தெரியாமற் பறந்துவிடும்.

ஐயோபாவம் நமது பாலியசிநேகிதன் ஒருவன் இறந்துபோய் விட்டதாகச் செய்தி வருகிறது; அதற்கென்ன செய்வோம். நமக்குப் பின்னுல் நம்மை யறியாமல் வந்து நம்கையைப் பிடித்துக்கொண்டு அழாதேயென்று ஆறுதல் சொல்லுகிற அவளுடைய பத்துவிரல்கள் ஒவ்வொன்றும் ஒரு சிநேகிதனல்லவா.

ஐயையோ நமது தங்கை திடீரென்று இறந்து விட்டாளாம். அடா! அத்தனை அழகும் சாம்பலாய்ப் போய்விட்டதா! உலகமுழுவதுமே மனிதனுக்கு ஒரு பெரிய சுடுகாடாக சிருஷ்டிகப்பட்டதே தவிர வேறொன்றுமில்லை யென்று தோற்றுகிறது! "இனி நான் உங்களுக்கு தங்கை தமக்கை எல்லா உறவுமாக இருக்கறேன். தாங்கள் இப்படி ஏங்கிப் போகக் கூடாது" என்று அவள் நம்மைத் தேற்றி நமது மார்பில் சாய்ந்து கண்ணீர் ததும்பும் நம் கண்களைப் பார்த்துத் தானும் கண்ணீர் பெருக்கும்போது—இதைத் தான் கடவுள் மனித ரூபமாய் ஆபத்துக்குதவுகிருரென்று சொல்லுகிருர்களோவெனத் தோற்றும்.

கொஞ்ச நாளைக்கெல்லாம் நமது தாயும் இறந்துபோய் விடுகிருள். ஒன்றியாய்த்

தவிக்கும் தாயில்லாப் பிள்ளையைப்போல் உலகத்தில் பாபிகள் வேறுண்டா? என்று வருந்துவோம்.

"பிறந்த வீட்டிற்குக் கொள்ளி வைப்பது தானே நமது கடமை. அதற்காக வருத்தப்படலாமா! தாய்க்குப்பின் தாரமென்று நானிருக்கிறேன். தங்கள் ஸௌக்கியத்திற் கொன்றும் குறைவு வராமல் பார்த்துக் கொள்ளுகிறேன்" என்று அவள் தன் முந்தானையால் நம் கண்களைத் துடைக்கும்போது அவள் துக்கத்தில் நம்துக்கம் மறைந்து அவள் நமக்குச் செய்யு முபகாரத்துக்குப் பிரதிபாகவாவது நாம் அவளுக்கு வருத்த முண்டாக்காமலிருக்க வேண்டும் என்று நமக்குத் தோற்றும். மேலும் ஸ்வர்ணவிக்கிரகங்கள் போலிருக்கும் அக்குழந்தைகளின் சேஷ்டைகளெல்லாம் இப்பொழுது அவைகள் நம் குழந்தைகளாய்விட்டபிறகு தொந்திரவாகத் தோற்றுமா? விவாகமாகிக் கொஞ்ச நாள் வரையில் புஷ்பங்களும் வாசனைகளும் வாங்கிக்கொண்டிருந்தது போல் இப்பொழுது வாங்கவேண்டிய அவசியமில்லை. ரோஜா புஷ்பம்போன்ற கன்னங்களோடும் பால்வாசனை மாறாத முகத்தோடும் கூடிய அவ்வருங் குழவிகளை யொருதரம் முத்தமிட்டு அவைகள் பேசும் இனிய மதலைச் சொற்களைக் கேட்டபின், ஜடவஸ்துக்களான புஷ்பம், வாசனை, பழம் முதலியவைகளையும் வீணையாதிகளின் கானங்களையும் எவனாவது விரும்புவானா? கடைசியில் இவைகளெல்லாவற்றிற்கும் மேலாய்க் குடும்பத்துக்கே தாயாக விருந்து பாதுகாத்து வரும் அவளன்னையைக்கண்டு நாம் ஒன்றுந் தோன்றாமல் பிரமித்து "ஏனடா இவள் இப்படி வீணாக நம்மேலிவ்வளவபிமானத்தைச் செலுத்திக் கஷ்டப்படுகிறாள்" என்று வருத்தமுற்று "எப்படி யிருந்தாலும் உபகாரத்துக்குப் பதிலுபகாரம் செய்வது நம் கடமை. அதுகூடத்தான் செய்யாவிட்டால் நாமென்ன மனிதன்" என்று எண்ணி நாமும் அவளிடத்தில் அன்பு பாராட்டி வருவோம்.

கடவுளிடத்தில் பக்தியும் நன்றியறிவு முண்டாகவேண்டுமானால், முன்போல் பஜனை மடங்கள், கோயில் குளங்களுக்குப் போக வேண்டியதில்லை. அவருடைய மகிமைகளைக் கண்டானந்தப்பட வேண்டி ஆறு மலை ஏரிகளைப் பார்ப்பதனாவசியம். நாலு க்தவையும் சாத்திக்கொண்டு நம் வீட்டுக்குள்ளேயே அவருடைய மகிமைகளை யெல்லாம் காணலாம். அவர் நம்மிடத்துச் செலுத்தும் அன்பும் செய்யுமுபகாரங்களு மெல்லாம் இங்கேயே இருக்கின்றன.

நமக்கும் எப்பொழுதாவது வியர்தி வந்து படுக்கும்படி நேரிட்டால், தடபடலாய் அங்குமிங்கும் ஓடிச் சந்தடி செய்து நமக்குச் சுஷ்ரூஷை செய்வதாகப் பாசாங்கு செய்யும் வேலைக்காரர்களைக் கோபித்து அலுத்துக் கொள்ள வேண்டியதில்லை. சந்தடியே செய்யாமல் எலிபிடிக்க வரும் பூனைபோல் மெதுவாய் வந்து நம் பக்கத்திலுட்கார்ந்து ஜிலு, ஜிலு என்று பன்னீர்போற்குளிர்ந்து பஞ்சணைபோல் மிருதுவான ஒரு கையால் நம் நெற்றியைத் தொட்டுப் பார்த்து மற்றொரு கையால் விசிறுவள். உலக வியாபாரங்களுடைய தொந்திரவுக்ககப்படாமல் கொஞ்ச நேரம் பொழுது போக்க வெண்ணி நம் தேகஸ்திதியை விசாரிக்க வந்ததாகச் சற்று நேரம் தலையை நீட்டி வாசா கைங்கரியம் செய்து போகும் சிநேகிதர்களுடைய உதவியை எதிர்பார்க்கவேண்டியதில்லை. எப்பொழுதும் தன் துக்கத்தை வெளிவிடாமலடக்கி அகமலர்ச்சியில்லாதிருந்தும் நமக்காக முகமலர்ச்சி பூண்டு நம்மையுபசரித்து வரும் இன்னுயிர்த்தோழி நம் பக்கத்தை விட்டு விலகாள். நமக்காக இவ்வளவு பாடு படுகிறாளே என்றொருபக்கம் துக்கத்தையும் நம்மிடம் இவ்வளவன்பு வைத்திருக்கிறாளே என்றொருபக்கம் சந்தோஷத்தையும் ஒருங்கே உண்டுபண்ணுவள்.

ஜ்வாலை ஏராளமாய் விருத்தியாகி வெகுதூரம் உயரக்கிளம்பி விறகை யெல்லாம் பஸ்மமாக்கிக்கொண்டிருந்தது. மேலும் யோசித்தேன். இப்பொழுது எவ்வளவுக்கெவ்வளவு நம் மனது சுயாபிமானம் பாராட்டி தயை பச்சாத்தாபம் இவைகளை மறந்திருக்கிறதோ அதற்கு முற்றிலும் மாறாய் அன்பு நிறைந்து பரோபகார சிந்தைகளுக் கிருப்பிடமாகி விடும். நமக்கு நேரும் ஸுகங்களெல்லாம் இரட்டித்ததுபோலும் துக்கங்களெல்லாம்

ஸரிபாதி குறைந்தது போலும் தோற்றும். ஸாகத்தக்கனௌபரியுமுணர்ச்சியும் அதிகரிக்கும். உலகத்துக்கவலைகள் நம்மைப் புண்படுத்தா. கடைசியில் நாமும் அன்பேயுருவாக மாறி ஆகாயமட்டுமளாவி ஜீவகோடிகளைக் காத்தி ரக்ஷிக்கும் பேரன்பாகிற பேரின்ப ஸாகரத்தில் பேதமறக்கலந்து விடுவோம்.

கடைசியில் விய திபைப் பின் பற்றிக் காலனும் வந்து நம்மை யழைப்பானாகில் அப்பொழுது சிற்றன்புக்கும் பேரன்புக்கும் கூப்பிடு தூரந்தான் என்று வழிகாட்டுவள்போல், ஸம்ஸாரக் கடலிலடிபட்டுத் தியங்கிக்கிடக்கும் நம் ஜீவனைக் கைபிடித்துக் கரையேற்றி, பேரன்பு பேரின்பம் பேரறிவு இம்மூன்றுமொன்றும் சச்சிதாநந்தத்தின் வசத்தில் ஒப்புவித்துத் தானும் அங்கு வரவழி தேடுவள. அவளுடைய கையைத் தவிர வேறெது பட்டாலும் நம்முடலில் உணர்ச்சியுண்டாமா? அவளது விரல்களல்லாது வேறெந்த ஔஷதமும் நம்மவயங்களின் வலியைப்போக்குமா? வேறெவர்கள் ஆறுய்க் கண்ணீர் பெருக்கினுலும, அவளது கண்களிலிருந்து விழும் ஒருசொட்டு ஜலத்துக்கு சமானமாமா? முடிவில் உடலுயிராவி யிம்மூன்றையு மூடுருவிச் செல்லும் அவளது சுய ஞாபகமற்ற இரக்கங் கலந்த பார்வையாம் ஜோதியில் நம் பார்வை கலக்க இருவரும் ஒரே பரஞ்சோதியிற் கலந்து விடுவோம்.

இந்நேரத்துக்கெல்லாம் ஜ்வாலையும் வெகுவாய் அடங்கிவிட்டது. கடைசியாக அது அவியும் விளக்கெனும் பழமொழிக்கிணங்க பளிச்சென்று ஒருதரம் உபரக்கிளம்பி விழுந்து பின்னும் தற்செயலாய் மிகுந்திருந்த ஒரு மெல்லிய குர்சியைப் பற்றி அதையும் எரித்துப் பிறகு அங்குமிங்கு மாட்டியலைந்து தள்ளாடித் தலை யெடுக்க முயன்று இரை ஒன்று மகப்படாமல் அவிந்தது. உருக்கிவிட்ட தங்கம்போல் பிரகாசிக்கும் தணல்களைத் தவிர வேறொன்றுமில்லை. அவையும் வெகு விரைவாய் நீறுபூத்து சாம்பலாய்க் கொண்டிருந்தன. தூங்கும் நாயைத் தவிர எனக்குத் துணையுமில்லை.

(இன்னும் வரும்.)

ஓர் நித்தியபிரமசாரி.

---

## The Stories of Mahabharata — for Children.

(*Specially written for the Vivekachintamani By S. Muthu Iyer, B. A.*)

## மஹாபாரத கதைகள்—சிறுவர்களுக் குபயோகமாக எழுதப்பட்டன.

(90-வது பக்கத்தொடர்ச்சி.)

### 4. இருதிறத்தாரும் கல்விகற்றல்.

பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் முதலில் கௌதம மகாமுனிவரின் பேரனாகிய கிருபாசாரியார் என்பவர் அஸ்திர சஸ்திரங்களாகிய ஆயுதப் பிரயோகங்களைக் கற்பித்து வந்தார். பின்பு திருதராஷ்டிரன் பரத்துவாச முனிவரின் புத்திரரும் பரசுராமரின் சிஷ்யருமாகிய துரோணாசாரியாரை வரவழைத்துப் புத்திரர்களுக்குப் படைக்கலம் கற்பித்தான். அவர்களில் அருச்சுனன் வில் வித்தையில் மிகவும் தேர்ந்தவனுய் துரோணாசாரியாருக்கு அத்யந்த ப்ரிய சிஷ்யனுன். கற்பித்த விஷயங்களைக் கருத்தோடு முயன்று படிக்கும் சூக்ஷ்ம புத்தயுள்ள மாணாக்கரிடத்தில் சந்தோஷமும் பிரீதியும் ஆசிரியனுக்குண்டாதல் இயற்கையே யன்றோ? அன்றியும் ஒரு நாள் துரோணாசாரியாரை ஓர் கொடிய முதலை பிடித்துக்கொள்ள அச்செய்தியைக் கேட்டதும துரியோதனன் முதலானவர்கள் வெறுங்கையோடு வேடிக்கை பார்க்கப்போவார் போலப்போக அருச்சுனன் வில்லும் கையுமாக விரைந்தோடி அந்த முதலையைக் கணப்போதிற் கொன்று வீழ்த்திக் குருவின் துயரை நீக்கிப் பிராணனைக் காப்பாற்றினுன். "உடுக்கை யிழந்தவன் கை போல வாங்கே-இடுக்கண் களைவதாம் நட்பு." என்றபடி ஆபத்துக் காலத்தில் உதவுகின்றவனன்றே அருமைச் சினேகிதனுவான்? ஆகையினுலே துரோணாசாரியாருக்கு அருச்சுனனிடத்தில் முன்னிலும் நிரம்பப் பிரீதி யுண்டாயிற்று.

## 5. கல்வித் திறமையைப் பரிசோதித்தல்.

இவ்வாறு பாண்டவர்களும் கௌரவர்களும் கல்வி கற்றுவந்த காலத்தில், அவர்களுடைய கல்வித்திறத்தைப் பரிசோதித்துக் காட்டும்படி துரோணாசாரியார் ஒருநாள் பீஷ்மர் விதுரர் முதலான ராஜாக்களையும் பெரியோர்களையும் வரவழைத்து அவர்கள் முன்னிலையில் தம் சீடர்களைக்கொண்டு அவரவர் கற்றுக்கொண்ட கல்வித்திறங்களைக்காட்டச் செய்தார். தருமன் முதலான பாண்டவர்களும் துரியோதனன் முதலான கௌரவர்களும் அஸ்திர சஸ்திரங்களான ஆயுதப் பிரயோகங்களிலும் ஆனையேற்றத்திலும் குதிரையேற்றத்திலும் யாவரும் வியக்கத்தக்க அனேக அற்புதமான சாமர்த்தியங்களைக் காட்டினார்கள். துரியோதனனும் வீமசேனனும் கதைவித்தையில ஒருவர்க்கொருவர் சமானமானவரென்று காட்டினார்கள். அருச்சுனனும் கர்ணனும்* அவ்வாறே வில்வித்தையில் வல்லவரென்பதைத் தெரிவித்தார்கள். அன்று காட்டிய திறமைக்காகத் துரியோதனன் கர்ணனை அங்கபூபதியாகச் சிங்காதனத்திலேற்றிச் சிறப்புச்செய்தான்.

* கர்ணன் குந்திதேவிக்குக் கன்னிப்பருவத்தில் சூரியதேவன் அநுக்கிரகத்தால் உண்டானவன். அவள் அபவாதத்துக்கஞ்சி ஓர்பேழையில் வைத்துக் கங்கையில் விட்டுவிட அக்குழந்தையைத் திருதராட்டிரன் தேர்ப்பாகன் எடுத்துவளர்க்க வளர்ந்து பின்பு துரியோதனனுக்குப் பிராணசிநேகிதனானான்.

## 6. துரோணாசாரியார் தக்ஷிணைபெறுதல்.

துரோணாசாரியார் பால்யத்தில் யாகசேனன் என்னும் ஒரு ராஜகுமாரனோடு கல்விகற்றுவந்தார். அப்போது அந்த யாகசேனன் அவரிடத்தில் அத்யந்த சிநேகம்பூண்டு அச்சிநேகத்தால் தான் தக்கவயதுவந்து ராஜ்யத்தைப் பெற்றுக்கொள்ளும் காலத்தில் அவ்விராச்சியத்திற் பாதி அவருக்குப் பகிர்ந்துகொடுப்பதாகச் சொல்லியிருந்தான். ஆயினும் பின்புதான் அரசனான காலத்தில் அந்த வாக்தத்தத்தை நிறைவேற்ற மனமில்லானாய் அவர்க்குரிய பாகத்தைக் கொடேனென்று மறுத்துவிடத், தமக்கு இராச்சியம் வரும் வருமென்று இலவுகாத்த கிளிபோல எண்ணியிருந்த துரோணாசாரியார் மிகவும் கோபம்கொண்டு அரசனை நோக்கி "நான் எனக்குரிய பாகத்தை உன்னிடம் வாங்காமற்போனால் என்பேரை மாற்றியழை." என்று சபதம் கூறிப்போய்விட்டார். ஆதலின் அவர் இப்போது தம்சிஷ்யர்களையழைத்து அச்சபதத்தைத் தமக்கு நிறைவேற்றிக் கொடுக்கவேண்டுமென்றும் அதுவே தமக்கு அவர்கள் கொடுக்கும் குருதக்ஷிணையென்றும் கூறினார்.

அதனால் பாண்டவர்களும் கௌரவர்களும் யாகசேனன்மேற் படையெடுத்துச் செல்ல துரியோதனன் அவ்யாகசேனனோடு சண்டைசெய்ய மாட்டாமல் மீண்டுவிட்டான். அருச்சுனனே பராக்கிரமமாகப் போர்செய்து யாகசேனனைச் செயித்து அவனைத் தன் தேரிற் கட்டிக்கொண்டுவந்து துரோணாசாரியார் முனவிட்டு அவரது பிரதிக்கினையை நிறைவேற்றி அவரைச் சந்தோஷப்படுத்தினான். துரோணாசாரியாரும் தமக்குரிய பாதிராஜ்யத்தைப் பெற்றுக்கொண்டு மறுபாதியை யாகசேனனுக்கே திரும்பக்கொடுத்து அனுப்பிவிட்டார்.

## 7. திரௌபதியின் பிறப்பு.

துரோணாசாரியாரால் விடுபட்ட யாகசேனன் மிகவும் வெட்கமும் துக்கமுமடைந்து தன்னை அவமதிப்புச்செய்த அந்தத் துரோணாசாரியரைக் கொல்லவல்ல ஒரு புத்திரனையும் தன்னை வென்ற பராக்கிரமசாலியாகிய அருச்சுனனுக்கு மணம்செய்து கொடுக்கத்தக்க ஒருபுத்திரியையும் பெறவேண்டுமென்று நிச்சயித்தான். அவ்வாறே அவன் உபயாசன் என்னும் ஒரு முனிவரை அடைந்து தன்மனோரதம் சித்திக்குமாறு ஒருயாகம் செய்ய வேண்டிக்கொண்டான். தேவர்களைக் குறித்துச்செய்யும் யாகத்தால் நாம் கோரிய எவ்வகையான பொருள்களையும் பேறுகளையும் பெறக்கூடுமென்பது நம்முன்னோர்களின் கொள்கையாயிருந்தது. இதுவன்றி இந்திரியங்களை யடக்கி மனத்தை ஒருநிலைப்படுத்திக் கடவுளைக் குறித்துச்செய்யும் தவத்தினாலும் கடவுள் பிரசாதத்தைப்பெற்று வேண்டிய வரங்களைப் பெறலாமென்பதும் நம்முன்னோர்கள் கொள்கையாம். ஆதலின் அரசன் முனிவரைகொண்டு புத்திரகாமேஷ்டி யென்னும் யாகத்தைச்செய்விக்க அந்த யாகத்தீயிலிருந்து ஆயுதமும் கையுமாய் முதலில் வெற்றிவீரன்போல ஒருபுத்திரனும் அதன்பின்

இலக்ஷ்மிபோல ஒருபெண்ணும் தோன்றினார்கள். அரசன் தன்மனோரதம் நிறைவேறக்கண்டு பேரானந்தத்தை யடைந்தான். இப்பெண்தான் துரோபதியென்பவள். பண்டு இராட்சத குலத்தை முடிக்கச் சீதாதேவி உற்பத்தியானதுபோல அன்று க்ஷத்ரியகுலத்தை முடிக்க இப்பெண் தோன்றினள். பின்பு யாகசேனன் புத்திரனாகிய திட்டத்துய்மனன் துரோணாசாரியாரை அடுத்து அஸ்திரசஸ்திரங்கள் தனக்குக் கற்பிக்கவேண்டுமென்று கேட்க அவர் அவனால் தமக்கு மரணம் நேருமென்று தெரிந்திருந்தும் வஞ்சனையில்லாமல் உபதேசித்தார்.

### 8. பாண்டவர்களைத் துரியோதனன் மற்றொருதரமும் கொல்ல முயலுதல்.

பாண்டவர்கள் ஐவரும் இவ்வாறு கல்விகேள்விகளால் நிரம்பிச் சௌரிய சாமர்த்தியமுடையவராயிருந்தபோது, திருதராட்டிரன் யுதிட்டிரனை இளவரசாக்கி முடிசூட்டினன். பாண்டவர்கள் அன்றுதொட்டு நாளுக்கு நாள் உயர்ச்சியடைய அதைக்கண்டு துரியோதனன் முதலானவர்கள் பொறாமைகொண்டு தந்தையைநோக்கி "நீ யுதிட்டிரனுக்குக் கொடுத்த அரசைமீளக் கொள்ளாயாகில் நாங்கள் அப்பாண்டவரை இந்நகரில் வைக்கமாட்டோம்" என்று கோபித்தார்கள். அதனால் திருதராட்டிரன் வாரணாவதம் என்னும் மற்றொருநகரத்தில் அரக்குமாளிகையொன்று கட்டுவித்து அங்கு போயிருக்கும்படிப் பாண்டவர்களை அனுப்பியதுமன்றி அவர்களைச் சமயம்நோக்கி அரண்மனையில் தீயிட்டுக் கொல்லும்படிக்கும் புரோசனனென்னும் கபடமந்திரி யொருவனைக் கூட்டியனுப்பினான். அந்தச் சர்ப்பனையைப் பாண்டவர்கள் அந்த அரண்மனையைக் கட்டிமுடித்த தச்சன் ஒருவனால் தெரிந்துகொண்டு சமயங்கண்டு புரோசனனோடு மாளிகை யெரிந்துபோக நெருப்பு வைத்துவிட்டுத் தாங்கள் இரகஸ்யமாகத் தப்பிக்கொண்டார்கள். இவ்வுண்மையை அறியாமல் பாண்டவர்கள் மாண்டுபோனார்கள்; நாடுமுழுதும் இனி நமக்கே உரியது என்று துரியோதனனும் துணைவரும் மனமகிழ்ந்திருந்தார்கள்.

### 9. பாண்டவர்கள் வேத்திரகீயம்சென்றிருத்தல்.

வாரணாவதத்திலிருந்து தப்பியோடின பாண்டவர்கள் வழியில் ஒரு பெருங்காட்டிற்கு வந்துசேர்ந்தார்கள். அங்கு வீமசேனன் தன்னை எதிர்த்துவந்த இடும்பன் என்னும் ஒரு ராக்ஷஸனைக்கொன்று அவன் தங்கையாகிய இடும்பி யென்பவளைக் கல்யாணம் செய்துகொண்டான். அப்போது அவனுக்கு அந்த இடும்பியின் வயிற்றில் கடோற்கசன் என்னும் ஒருமகன் பிறந்தான். இந்தக் கடோற்கசன் இராக்ஷதர்களுக்குரிய மாயை வித்தைகளில் வல்லவனாகிப் பிற்காலத்தில் பாண்டவர்களுக்குப் பாரதயுத்தத்தில் போர்புரிந்து அநேக உதவிகளைச் செய்வானானான். வீமசேனன், மனைவியையும் மகனையும் அந்தக் காட்டில்தானே விட்டுவிட்டுத், தன் சகோதரர்களிடத்தில் வந்துசேரப் பாண்டவர்கள் பின்பு பிராமணவேஷம்பூண்டு வேத்திரகீயம் என்னும் ஊரையடைந்து அங்கு ஒருவேதியனால் ஆதரிக்கப்பட்டுச் சிலநாள் தங்கியிருந்தார்கள். அக்காலத்தில் அவ்வூர்ப் பிராமணர்களைத் தினம் ஒவ்வொருவராக வரிவைத்துத் தின்றுகொண்டிருந்த பகாசுரன் என்னும் ஒரு கொடிய அசுரனை வீமன் கொன்று அவ்வூராருக்குக் கைம்மாறில்லாப் பேருபகாரத்தைச் செய்து அவர் துயரத்தை நீக்கினான்.

### 10. திரௌபதி மாலையிட்டது.

அக்காலத்தில் துருபதராஜன் தான் முன்னே கருதியவாறு திரௌபதியை அருச்சுனனுக்குக் கொடுக்கவெண்ணிச் சுயம்வரம் நியமித்து அரசர்களுக்குத் தூது போக்கினான். அச்சங்கதியைப் பாண்டவர்கள் ஒரு பிராமணனால் கேள்விப்பட்டுத் தாமும் அச்சுயம்வரத்துக்குப் போனார்கள். போகும் வழியில் தம்மை எதிர்த்த சித்ராங்கதன் என்னும் வித்யாதரராஜனை அருச்சுனன் செயித்தான். இன்னம் வழியில் அநேக நற்சகுனங்களையும் கண்டார்கள். அந்தத் துருபதராஜன் நகரில் வந்து சேர்ந்ததும் பாண்டவர் தமது தாயாராகிய குந்திதேவியை ஓரிடத்தில் வைத்துவிட்டு அரசர்கள் நெருங்கியிருந்த சபாமண்டபத்தைச் சார்ந்தார்கள். அப்போது திரௌபதியை அநேக ஆடையாபரணங்களால் அலங்கரித்து மணக்கோலம் செய்து

அச்சபைக்குக் கூட்டிவரத் சமயனுகிய திட்டத்தும்னன் அரசர்களை நோக்கி ஓர் வில்லையும் பாணங்களையும் காட்டி "ஓ ராஜகுமாரர்களே, இவ்வில்லெடுத்து அஸ்திரசந்தானம் செய்து அதோ சுழலுகின்ற சக்கரத்தின் மத்தியில் திரிந்துகொண்டிருக்கும் குறியில் தப்பாமல் எவன் எய்து அதனை வீழ்த்துகின்றானோ அவனுக்கே என் தங்கை உரியவள்" என்றான். அச்சொல்லைக்கேட்டு இராஜகுமாரர்களில் அநேகர் அதைரியமடையத் துரியோதனன் முதலான சிலர் அகங்கரித்து எழுந்து சென்று வில்லைக் கையிலெடுத்தும் அதனை வளைக்கமாட்டாமல் மீண்டுவிட்டார்கள். சிலர் அவ்வில்லை எடுக்கவும் ஆற்றலில்லாமல் கீழே சோர்ந்து விழுந்துவிட்டார்கள். அப்போது பிராமணர்பத்தியில் இருந்த அருச்சுனன் முன்னேகிவந்து "பிராமணகுலத்தவர் இந்த இலக்ஷியத்தைச் சொன்னபடியே எய்து வீழ்த்தினால் உமக்கு ஒப்பாமோ"? என்ன, அதற்குத் திட்டத்தும்னன் "ஆகும், ஆகும். அந்தணராயினும் அரசராயினும் யாவராயினும் சரியே" என்றனன். உடனே அருச்சுனன் சிங்கம்போலச் சென்று அம்பைஎடுத்து யாவரும் வியக்குமாறு இலக்ஷியத்தை அறுத்துத் தள்ளினன். தேவர்கள் பூமழை பொழிந்தார்கள். திரௌபதியும் மனங்களித்து அருச்சுனனுக்கு மணமாலையைச் சூட்டினுள். அப்போது துரியோதனன் பொறாமைகொண்டு அரசர்களை நோக்கி, "என்னே! ராஜகன்னிகையைப் பார்ப்பான் ஒருவன் கொண்டுபோக நாம் பார்த்திருத்தல் அழகோ" வென்று எல்லோரையும் போருக்குத்தூண்ட, அருச்சுனனும் வீமனும் அவர்களோடெதிர்த்துச் சண்டைசெய்து எல்லாரையும் தோற்றோடும்படித் துரத்தியடித்தார்கள். பின்பு அவர்களை இன்னாரென்று தெரிவித்து ஸ்ரீகண்ணபிரான் சண்டையை விலக்கிச் சமாதானம் செய்ய அரசரெல்லோரும் தத்தம் ஊர்போய்ச் சேர்ந்தார்கள். பாண்டவர்கள் ஐவரும் திரௌபதியோடு தாயாரிடம் சென்று "இன்று எமக்குக் கிடைத்தற்கரிய சிறந்த பிக்ஷையொன்று கிடைத்தது. அதை என்னசெய்வது?" என்று கேட்க, உள்ளிருந்த குந்தி உண்மையுணராமல் அதனை யாதோ தின்பண்டமென்று நினைத்து "நீங்கள் ஐவரும் அதை அருந்துங்கள்" என்றனள். அதனால் திரோபதி அவர் ஐவர்க்கும் மனையாள் ஆயினள். மாத்ருவாக்கியமே வேத வாக்கியமாக நம்முன்னோர்கள் கருதியிருந்தார்களென்பது இதனால் விளங்குகின்றது. இக்காரியம் அநுசிதமாயினும் அக்காலத்துப் பெரியோர்கள் ஆக்ஷேபியாமல் அதனை ஒப்புக்கொண்டதனால் அவர்கள் இவ்விஷயத்தில்வைத்த கௌரவம் விளங்குகின்றது. ஸ்ரீராமபிரான் அரசைத் துறந்து காட்டுக்குச் சென்றதும் மாத்ருவாக்கிய பரிபாலனஞ் செய்தற்கேயன்றோ? இதனாலன்றோ ஔவை யாரும் 'தந்தைசொன்மிக்க மந்திரமில்லை' யென்றும் 'தாய் சொற்றுறந்தால் வாசகமில்லை' யென்றும் கூறினர். துருபதராஜன் மறுநாள் பாண்டவர்களைத் தன் அரண்மனைக்குக் கூட்டிச்சென்று வேதவியாஸரின் உத்திரவால் அவர் ஐவர்க்கும் திரௌபதியை விதிப்படி விவாகம் செய்து கொடுத்தான். அதுகேட்டுத் திருதராட்டிரர் சண்டைக்குப் புறப்பட்டுவர அவர்களைத் திட்டத்தும்னனும் பாண்டவர்களும் வென்றார்கள். பின்பு திருதராட்டிரன் பாண்டவர்களுக்குரிய பாகத்தைக்கொடுக்க அவர்கள் நெடுங்காலம் சுகித்து வாழ்ந்திருந்தார்கள்.

எஸ். முத்துஐயர், பி. ஏ.

## SITA—A TALE OF HINDU DOMESTIC LIFE.
## சீதா அல்லது இல்லற வாழ்க்கை.
(அதிகாரம்—3.)

மகாதேவய்யருக்கு, 1000 ரூபா தண்டம் கொடுத்ததில் வெகு வருத்தம். அவர் அதே விசாரத்தில் இளைத்துப்போய்விட்டார். காமேசுவரய்யர் இதைப்பார்த்து பரிதபித்து பணம் எடுத்தவர்களைக் கண்டுபிடிக்கவேண்டுமென்று ஜோஸியரை அழைத்துக் கேட்டார். அவர், உமது உறவிலேயே ஒருவன் எடுத்திருக்கிறான். உமது ஆள் ஒருவன் அவனுக்கு ஒத்தாசை செய்திருக்கிறான் என்றார். மகாதேவய்யருக்கு அறைகுறையாயி

ருந்த சந்தேகம் நீங்கிற்று. இப்படியிருக்க, விருதுபட்டி என்று ஓர் ஊரில் பத்ரகாளியம்மன் என்று ஓர் சுவாமி ரொம்ப சக்தியுள்ள தெய்வமென்றும் அதற்கு உபாசனைசெய்தால், எடுத்தவன் நான்தான் எடுத்தேனென்று கதறிக்கொண்டுவந்து சொத்தை கொடுத்துவிடுவானென்றும் கேள்விப்பட்டு அந்த ஸ்தலத்தைப் பார்ப்பதற்காக காமேசுவரய்யர் விருதுபட்டிக்கு புறப்பட்டார். அது வெகுதூரத்திலிருந்தபடியால் காமேசுவரய்யருக்கு போய்ச் சேர ஒருவாரமாச்சுது. அங்கே கோயிலுக்குப்போய் சுவாமிக்கு தீபாராதனை செய்து பக்தியாய் காமேசுவரய்யர் பிரார்த்திக்கும்போது ஓர் ஆண்டிபேரில் சுவாமிவந்து, அடே நீ யோஜிக்கிறது தெரியும் உன்பணம் அகப்படாது. ஆனால் பிணத்தைப் பார்ப்பாய் என்றது. காமேசுவரய்யர் அதைக் கேட்டு ஊர்வந்து சேர்ந்தார். ஆறுமாதத்திற்குப் பிறகு சேதுவய்யர் தன் பிள்ளை சுந்திரத்துக்கு கலியாணம் நிச்சயித்தார். கலியாணம் வெகு சிறப்பாய் நடத்த ஆரம்பித்தார். மங்கலம் என்னும் ஓர் ஊரில் கலியாணம் நடந்தது. சேதுவய்யருக்கு 1000 ரூபா வரையில் செலவாகியிருக்கும். அவருக்கு அவ்வளவு பணம் அந்தசமயத்தில் ஏது என்று எல்லோரும் சந்தேகப்பட்டார்கள். கலியாணமான மறுநாள் கலியாண மாப்பிள்ளையைக் காணோம். எங்கே தேடியும் அகப்படவில்லை. கலியாணவீட்டில் எல்லோரும் வெகு வருத்தப்பட்டார்கள். அன்று சாயந்திரம் அந்த ஊர் தெப்பக்குளத்தில் சேதுவய்யர்குமாரன் சுந்தரம் செத்தபிணமாய் மிதந்தான். கலியாணவீடெல்லாம் கல்லெடுப்புவீடாய் முழங்கியது. பெண் திரண்டு வருவதற்குள் புருஷன உருண்டுபோய் விட்டான். சேதுவய்யருக்கு துக்கம் பொறுக்க முடியவில்லை. அய்யோ பிணத்தை பார்ப்பாயென்று சொன்னதாக சொன்னார்களே. பிணத்தை காட்டிவிட்டதே என்று வாய்விட்டு அலறினார். காமேசுவரய்யர் பத்ரகாளியம்மனிடம் போயிருந்ததையும் அந்த சுவாமி சொன்னதையும் சேதுவய்யர் கேட்டிருந்தார். அவர் மேலே சொன்னபடி புலம்பவும் அதைக் கேட்டிருந்த முத்துவய்யர் அடே பாபி நான் இது தெரியாமல் வீண்பழி மகாதேவன்பேரில சுமர்த்தினேனே. சண்டாளா! நீ பண்ணின பழியா. நிரபராதியானவனிடம் தண்டம் பிடித்து, அது போதாமல் சத்யமும் செய்து உன்னால் அவனை விரோதம்செய்துகொண்டேனே என்றார். இந்த சமாசாரமெல்லாம் காமேசுவரய்யருக்கு தெரிந்ததும் அவர் தன் பழயகாவல்கார முத்துக்கருப்பனை கூப்பிட்டு மிரட்டிக்கேட்டார். முத்துக்கருப்பன் தானும் சேதுவய்யரும் சேர்ந்து பணத்தை எடுத்ததாகவும், சேஷய்யருக்கு பெண் பிறந்த தினத்தில் தான் வீட்டிற்கு வந்திருந்ததாகவும் எல்லோரும் வாசல்புறமே இருந்ததாகவும் அந்த சமயத்தில் சேதுவய்யர் பணத்தை எடுத்து தன்னிடத்தில் கொடுத்து அனுப்பிவிட்டதாகவும் ஒப்புக் கொண்டான். மகாதேவய்யருக்கு பணநஷ்டத்தால் மனவியாதி பலமாக பிடித்துவிட்டது அந்த வியாதி மேல்மேலும் அதிகரித்துக்கொண்டு வந்தது. இப்படி 6 மாதம் சென்றபிறகு, காமேசுவரய்யர் ஓர் பெரிய வீடுகட்டவேண்டுமென்று மகாதேவய்யரை கேட்டார். மகாதேவய்யருக்கு அது சம்மதமில்லை. என்னத்திற்கண்ணா வீடு. இருக்கிற சிறியவீட்டிற்கே குழந்தைகளைக் காணோம். மேலும் சிறுகக் கட்டி பெருகவாழ் என்று சொல்லியிருக்கிறதல்லவா. நமக்கு பெரியவீடு என்னத்திற்கு வேண்டாம் என்றார். காமேசுவரய்யருக்கு கோபம் வந்துவிட்டது. அவருக்குத் தான் போன வழியிலேயே தம்பிமார்களும் போகவேண்டுமென்று எண்ணம்! நான் எந்தயோசனை சொன்னாலும் உன் யோஜனைப்படியே போக வேண்டுமென்றும் என் யோஜனையை கேழ்க்கக் கூடாதென்றும் தீர்மானித்திருக்கிறாயா. நீ 1000ரூ. கண்டம் கொடுத்ததை விடவா நான் வீடுகட்டும்யோஜனை கெட்டுப்போய்விட்டது. ஆனால் நீயேயிங்கே இருந்து கொண்டிரு நான் எங்கேயாவது போய் விடுகிறேன். ஊரெல்லாம் பெரியமெத்தை வீடுகளாக இருக்கிறது. நமது வீடுமட்டும் மச்சுவீடென்று பட்டப் பெயரைமாத்திரம் வகித்துக்கொண்டு குச்சுவீடாயிருக்கிறது. மாணிக்க சகாயமென்று பெயர் வைத்துக்கொண்டு வழிப்பறிசெய்வதுபோல நமது வீடும் மச்சுவீடு என்றபெயரை வகித்திருக்கிறது. அன்றைக்கு சேஷனுக்கு பெண்பிறந்ததற்கு அழைக்கப்பட்ட ஜனங்கள் வாசலில் உட்காரக் கூட இடமில்லையே. எப்படியோ உன் இஷ்

டம்போல்செய். நான் எங்கேயாவது போகிறேன் என்றார். மகாதேவய்யருக்கு அவரை எதிர்த்து ஒன்றும் சொல்லக் கூடவில்லை. காமேசுவரய்யரைப்பார்த்து அண்ணா நீங்களேன் கோபித்துக் கொள்கிறீர்கள். நான் அனாவசியமாக என்னத்திற்கு பெரியவீடு என்றுதானே சொன்னேன். தங்களுக்கு அவசியமென்று தோன்றினால் கட்டுவதில் எனக்கு என்ன ஆக்ஷேபனை யிருக்கிறது என்றார். காமேசுவரய்யர் அப்படியில்லை, நமக்கு கட்டாயம் பெரியவீடு ஒன்றுவேண்டும். இந்தக்காலம் இப்படியேபோகுமா. சேஷனுக்கு ஒரு பெண்பிறந்திருக்கிறது. அதற்கு கலியாணம்செய்ய பெரியவீடுவேண்டாமா என்றார். மகாதேவய்யர் அப்படியானால் ஏற்பாடு செய்யுங்களென்றார். யதார்த்தத்தில் அவருக்கு வீடுகட்டுவதில் சம்மதமில்லை. ஆனால்காமேசுவரய்யர் கோபித்துக் கொண்டதனால் மேலுக்கு சம்மதித்தது போல காட்டிக்கொண்டார். காமேசுவரய்யர் உடனே வீட்டிற்காக மரூர் நாட்டுக்கோட்டை செட்டியிடத்தில் 8000ரூபா கடன்வாங்கினார். உடனேவீட்டிற்கு செங்கலுக்காக காளவாய் வைப்பதற்கு மரங்கள் வெட்டப்பட்டன. மகாதேவய்யர், வெகு காலமாயிருந்த ஓர்பெரிய புளியமரத்தை முதல்முதல் வெட்டச் சொன்னார். அவர் பள்ள ஆள்களில்வயதுசென்ற காத்தான் என்றஒருவன் மகாதேவய்யரிடம்வந்து 'சாமி அதைஏன் இப்போ வெட்டணுங்க. அதில் ஒருகறுப்பு வெகுநாளா யிருக்குதே' என்றான். மகாதேவய்யர் அவனுடைய முட்டாள்தனத்தைக்கண்டு சிரித்து, போடாமுட்டாளே கறுப்பாவது மரத்திலிருக்கவாவது நீதான் கறுப்பு. கிடக்கிறது வெட்டு பிறகு கறுப்பு என்ன செய்கிறது பார்ப்போமென்றார். அதைவெட்ட ஒரு நாள்சென்றது. கடைசிதினத்தில் அந்த மரம் கீழேவிழுந்தபோது மகாதேவய்யருக்கு முதுகில் யாரோ பளீரென்று அறைந்தாப்போலிருந்தது. திரும்பிப்பார்த்தார். ஒருவரையும் காணோம். பிறகு வீட்டிற்குப் போய்விட்டார். அன்றுராத்திரியே மகாதேவய்யருக்கு ஜுரம் வந்துவிட்டது. அவருக்கு ஏற்கனவே பணம்போனதிலும் காமேசுவரய்யர் கடன்வாங்கி வீடு கட்ட ஆரம்பம்செய்ததிலும் மனவியாதிபிடித்திருந்தது. இப்போது ஜுரமே வந்துவிட்டது. மகாதேவய்யர்பெண்சாதி பார்வதியம்மாள் அப்போது கர்ப்பமாயிருந்தாள். மகாதேவய்யருக்கு வந்த ஜுரம் விடாமல் ஒரு மாசமடித்தது. என்ன வைத்தியம் பார்த்தும் பிடிபடாமல் ஜன்னிபிறந்துவிட்டது. படுக்கையை விட்டு சிலசமயங்களில் ஓட ஆரம்பித்தார். இதைக்கண்டு எல்லோரும் பயந்து பட்டணம்போய் வீடு விஷயமாக சில சாமான்கள் வாங்க அனுப்பப்பட்டிருந்த சேஷய்யருக்கும், பார்வதியம்மாள் பிறந்தகத்து ஜனங்களுக்கும் தந்தி கொடுத்தார்கள். தந்திபோய் சேர்ந்து பார்வதியம்மாள் பிறந்தகத்து ஜனங்கள் வருவதற்குள் மகாதேவய்யருக்கு வியாதி அதிகரித்துவிட்டது. ஊரார் முழுவதும் மகாதேவய்யருடைய நல்ல குணத்திற்காக கட்டிக் காத்துக்கொண்டிருந்தார்கள். மகாதேவய்யர் சில சமயங்களில் தன் பிதற்றலை எல்லாம் விட்டு விட்டு சேஷன் வந்து விட்டானா என்று கேட்பார். அந்த சமயத்தில் ஜனங்களெல்லாம் கூட அவருடைய சகோதரவாஞ்சையைக் கண்டு பரிதாபப்பட்டார்கள். 5 மைலுக்கப்பாலிருந்த ரெயில்வேஸ்டேஷனுக்கு மாற்றுத்தபால் மாடுகள் வைக்கப்பட்டிருந்தன. சேஷய்யருக்கு பட்டணத்தில் தந்தி கிடைத்தவுடனே அவர் அடைந்த துக்கம் சொல்லி முடியாது. அய்யோ நமக்குத்தான் பெண்ணாய் போய்விட்டது. இவனாலேயாவது ஒரு பிள்ளை பிறந்து நமது குடும்பம் விளங்குமென்றிருந்தேனே. இவனுக்கும் இப்படி வந்து விட்டதே. எங்கள் குடும்பத்தை வகித்துப் பார்க்கக் கூடியவன் இவன் ஒருவன் தானே. அவனையும் பறிகொடுத்து விட்டு, நானெப்படி உயிர்தரிப்பேனென்று கதறினார். பிறகு தன்னைத்தானே சமாதானம்செய்துகொண்டு 'ஓகோ காயலா அதிகமென்றுதானே தந்தி வந்திருக்கிறது. நாமேன் அழவேண்டு'மென்று சொல்லி உடனே ரயிலுக்குப் புறப்பட்டார். ரயிலில் அவருக்குப் பொழுது போகவே இல்லை. அப்படியே பக்ஷிபோல பறந்து வந்து ஊரில் குதித்து விடவேண்டுமென்றிருந்தது. தந்தி வந்து மறுநாள் சேஷய்யர் ஊர்வந்து சேர்ந்தார். இவர் ரயிலை விட்டு இறங்கியதும் தெரியவில்லை, ஊர் வந்து சேர்ந்ததும் தெரியவில்லை. ஊர் வந்ததும் வண்டியை விட்டிறங்கி வெகு வேகமாய் வீடுபோய்ச் சேர்ந்தார். போய் அண்ணா

வைக் கண்டு பக்கத்தில் போயுட்கார்ந்தார்.
அண்ணாவுக்கு ஞாபகம் போய்விட்டது. இவர்
கையை எடுத்து கண்ணில் ஒத்திக்கொண்
டாரே யொழிய இவரோடு பேச முடிய
வில்லை. சேஷய்யர் அண்ணா, அண்ணா, இனி
மேல் அண்ணா என்று நான் யாரைக்கூப்
பிடப்போகிறேன் அண்ணா. நீ ஒருவன்
இருந்தால் எனக்குப் போதுமே. எனக்கு
ஒரு விசாரமுமில்லையே. நான் உன்னைப்
பிரிந்து எப்படி சகிப்பேன் அண்ணா என்று
வாய் விட்டழுதார். அவரைப்பார்த்து வீட்
டிலிருந்தவர்கள் எல்லோரும் அழுதார்கள்.
ஒருவருக்காவது துக்கம் சகிக்க முடிய
வில்லை. சற்று நேரத்திற் கெல்லாம் மகா
தேவய்யர் பிராணன் போய்விட்டது. சேஷய்
யர் தலையிலும் வயிற்றிலும் மாற்றி மாற்றி
அடித்துக் கொண்டார். காமேசுவரய்யர்
என் மகாதேவா என் அப்பனே உன்னைப்
போல் எனக்கு புத்தி சொல்லப்பட்டவர்கள்
இனி யாரடா இருக்கிறார்கள். நீ எனக்கு
சின்னவனா யிருந்தபோதிலும் புத்தியில்
பெரியவனா யிருந்தாயே. ஒருவரையாவது
அதிர்ந்து ஒரு வார்த்தை சொல்லமாட்
டாயே இனி நமது குடும்பத்தை யாரடா
உன்னைப்போல் பார்க்கப் போகிறார்கள்
என்று கதறினார். இதற்குள் வாசலில் அந்த
ஊர் குடித்தெருவு முழுவதும் கூடி விட்டது.
எல்லோரும் ஐயோ எங்கசாமியைப்போல்
இனிமேல் யாரிருப்பார்கள். எல்லோருக்
கும் நல்லவராயிருந்தாரே என்று சொல்லி
அழுதார்கள். இதற்குள் பார்வதியம்மாள்
தாயார் தகப்பனார் சகோதரர்கள் எல்லோ
ரும் வந்து விட்டார்கள். ஆகா அந்த கஷ்
டத்தை நாம் என்னவென்று சொல்லுகிறது.
லோகத்தில் எல்லோருக்கும் பொல்லாதவனா
யிருந்து மகா பாபி என்று பெயர் வாங்கிய
ஒருவன் இறந்தால் கூட, ஜனங்கள் அவனுக்
கும் இரக்கப்பட்டு இறந்தவனை தூஷிக்கக்
கூடாதென்ற நியாயத்தையு மனுசரித்து
அய்யோ பாவம் நல்லவன். வந்த சண்
டையை விடமாட்டான். வலுவில் சண்டை
க்கும் போகமாட்டான். ஒருவருக்கும் ஒரு
பைசா கூட கொடுக்கமாட்டான். ஒருவரு
க்கு கூட கொடுக்க வேண்டியதை நிறுத்திக்
கொள்ள மாட்டான். உடனே கொடுத்து
விடுவானென்று சொல்லி அவனுக்கும் மன
மிரங்கி வருத்தப்படுவார்கள். அதிலும் எல்
லோருக்கும் நல்லவனென்று ஒருவன் பெயர்
வாங்கி, இறந்துபோனால், அவனுக்காக ஜனங்
கள் வருத்தப்பட கேட்கவும் வேண்டுமோ.
மகாதேவய்யர் பெண்சாதி பார்வதியம்
மாளோ அதிபால்யம்: அவளுக்கு வந்த கஷ்
டத்தை ஜனங்களுக்கு பார்த்து சகிக்க முடிய
வில்லை. அவள் நாலு மாசம் கர்ப்பமாதலால்,
அவளுக்கு தொந்திரவு உண்டாகாமலிருக்கும்
பொருட்டு காமேசுவரய்யரும் பார்வதியம்
மாள் சகோதிரன் சாமண்ணாவும், ஒருவரை
யும் அவளிடம் துக்கம் கேட்கவிடாமல்
பாதுகாத்து வந்தார்கள். ஏனென்றால்,
நமது பெண் பெண்டாட்டிகள் இறந்த வீட்
டிற்கென்று பிலாக்கணங்கள் என்ற சில
பாட்டுகளை யெல்லாம் உருப்போட்டு,
அதுகளை யெல்லாம் சொல்லி அப்பாட்டு
களுக்கு தாளமாக மாரில் படீ படீரென்று
அடித்துக்கொள்கிறார்கள். இந்த துர்வழக்
கத்தை அவர்கள் விடுகிறதில்லை. இறந்தவர்
களுக்கு ஒரு பொட்டு கண்ணீர் விட்டால்
கூட, அந்தக் கண்ணீரை இறந்தவர்கள்
தாகத்துக்கு குடிக்கும்படி நேரிடுகிறதென்று
பெரியோர் சொல்லுகிறார்கள். அப்படி யிரு
க்க அழுவது போதாமல், இப்பேதைப் பெண்
பெண்டாட்டிகள், வீட்டிலும், போகிற வழி
யிலும், மயானத்திலும், ஒருவருக்கொருவர்
போட்டி போட்டுக்கொண்டு, மாரில் அடித்
துக்கொண்டு, உருப்போட்ட பாட்டுகளை
யெல்லாம் சொல்லிக்கொண்டு கட்டிக்
கொண்டு அழுகிறார்கள். இப்படி பார்வதி
யம்மாளை தொந்திரவு செய்யப்போகிறா
ளென்று பயந்து தான் காமேசுவரய்யர் ஒரு
வரையும் பார்வதியம்மாள் பக்கத்தில் விட
வில்லை. பிறகு மகாதேவய்யருக்கு செய்ய
வேண்டியதை யெல்லாம் செய்து முடித்தார்
கள். மகாதேவய்யர் இறந்தது அந்த ஊரில்
வீட்டிற்கு வீடு ஒருவர் இறந்ததுபோலிருந்
தது. ஊராருக்கே அப்படி யிருந்தபோது
மகாதேவய்யர் பெண்சாதி பார்வதியம்மா
ளுக்கு எப்படி யிருந்திருக்கவேண்டும். எல்
லோருக்கும் நல்லவனென்று பெயர் வாங்கி
எல்லோருக்கும் உபகாரம் செய்தவனுக்கு
இந்த உலகத்திலும் சுகமுண்டு பரலோகத்
திலும் சுகமுண்டு. நமது பணம் நாம் இறந்து
போகும்பொழுது கூட வருகிறதில்லை. அது

வீட்டில் பெட்டியை விட்டு அசையமாட்டே னென்கிறது. ஒருவன் சம்பாதிக்கிறான். அப்போது பெண்டாட்டி எல்லாம் என் அதிர்ஷ்டத்தால் தான் உங்களுக்கு வரும்படி வருகிறது என்று சொல்லி ஸ்தோத்திரம் செய்து பக்கத்தை விட்டு அசையாமல் வந்த பணத்தை யெல்லாம் பறித்துக்கொள்கிறாள். இதில் சிலர் தன்னைப்பெற்று வளர்த்த மாதா பிதாக்களைக் கூட லக்ஷயம் செய்யாமல் அவர் களைத் துறத்திவிட்டு பெண்டாட்டி தெய்வமே பெருந்தெய்வமென்று நம்பி யிருக்கிறார்கள். நாம் சிரமப்பட்டு சம்பாதிப்பதற்கு நாம் கட்டு வது ஆறுமுழவேஷ்டி; பெண்டாட்டி கட்டு வதோ 20 முழப்புடவை. அதிலும் கரை யில் காலிறங்காமல் முழுப்பட்டாகவும், கரை முழு அகலத்திலும் இருக்கவேண்டு மென்கிறார்கள். பணம் சேரச்சேர தன்தேக முழுவதையும் தங்கநகை, வைரநகைகளால் மூடிவிடவேண்டு மென்கிறார்கள். சம்பாதிக் கிற வரையில் பிள்ளையும் வெகுமரியாதையாய் தகப்பனிடம் பலமாய்கூடபேசாமல்மரியாதை காட்டுகிறான். வேலையாள்களுக்கோ சொல்ல வேண்டாம். கண்டால் யானைக்கு ஸிம்மஸ வப்னம்போல நடுங்குகிறார்கள். பணம் சம்பா திக்கும் யஜமானன் முட்டாளானபடியால் இந்த மரியாதையெல்லாம் தனக்கே நடந்த தென்று நினைத்துக் கொள்கிறான். அகம் பாவம் அதிகமாகிறது. தர்மத்தை மறந்துவிடு கிறான். சுவாமியேது பூதமேது என்கிறான். பகவானும் மனிதர்கள் அஞ்ஞானிகளாயிற் றே. அவர்கள் நல்லவழியில் வராதபடி பணம் என்கிற இருட்டானது மூடுகிறதேயென்று, நல்லவழி காட்டும்பொருட்டு 3 தரம் எச்சரி க்கை செய்கிறார். முந்தி தேகமெல்லாம், தளர்ச்சி யடையும்படி செய்கிறார். தலைமயிர் நரைக்கும்படி செய்கிறார். பல்கள் உதிர்ந்து போகும்படி செய்கிறார். கடைசியில் காது கேழ்க்காமலும், கண் தெரியாமலும் செய்கி றார். என்ன எச்சரிக்கை செய்தும் முட்டாள மனிதனுக்குத் தெரிகிறதில்லை. கடைசி எச் சரிக்கையான குருடத்தன்மை வந்துவிட் டால், முன் மரியாதையாக பக்கத்தைவிட்டு அசையாமலிருந்த பெண்சாதி இப்போது கிட்டவர மாட்டே னென்கிறாள். ஏதாவது ஒத்தாசைக்கு கூப்பிட்டால் கூட இதென்ன சனியன் இன்னும் துலையமாட்டேனென்கி றது. நேற்று மன்மதன்போலிருந்த அவ் வாத்து ராமனுதனை ஒரு நொடியில் கொண்டுபோன யமனுக்கு இந்தக் குருட்டுச் சனிய னிருந்தது கணதெரிய வில்லையே. இதுவும் என் துரதிர்ஷ்டந்தானென்று சொல்லி தூரத்தில் போய் நின்று புருஷன் கஷ்டப்படுவதை வேடிக்கை பார்க்கிறாள். பிள்ளையோசொல்லவேண்டாம். அவனுடைய தற்கால ஸ்தலமாகிய பெண்சாதியை நினைத் துக் கொண்டு, தகப்பனைப்பார்த்து, வாயை மூடிக் கொண்டிருக்கிறாயா வெளியில் சாக் கடையில் இழுத்து எறிந்து விடட்டுமா என் கிறான். வேலையாள்களோ கூப்பிட்டால்கூட காதில் படாததுபோல போய்விடுகிறார்கள். ஒருவன் தன்தங்கை ஏழையா யிருந்தபோது தன் வீட்டிற்கு வந்ததில் அவளை எப்போவந் தாயென்றுகூட கேட்கவில்லை. அவளுக்கு சாப்பாடுகூடப்போட மனமில்லாமல் துரத்தி விட்டான். பிறகு பகவானுடைய கிருபை யால், சிலகாலத்திற்குப்பிறகு அவள் வெகு பணக்காரி யாகிவிட்டாள். பிறகுஅவள்சகோ தரனைப்பார்க்க வருவதாக சொல்லியனுப்ப அச்சகோதிரன் இவள்வரும்வழியை எதிர் பார்த்துக்கொண்டு ஒரு மைலுக்கு முன்னால் போய் காத்திருந்து, அழைத்துக்கொண்டு வீட்டிற்குப்போய், ஓர்பெரியவிருந்து தயார் செய்து சாப்பிடச் சொன்னான். சகோதரி இலையிலுட்கார்ந்து பதிர்பேணி குஞ்சாலாடு முதல்சகலவித பக்ஷணங்களு மிருப்பதைக் கண்டு, முன் தனக்கு தன்தமையன் வெறும் சோறுகூட போடமாட்டேனென்று சொன் னதை நினைத்து தன்நகைகளை யெல்லாம் கழட்டி, எல்லோரும் கவனித்து கேட்டுக் கொண்டு இருக்கும் சமயம்பார்த்து வைரத் தோடே நீ குஞ்சாலாடு சாப்பிடு, வைரஅட்டி கையே நீ பதிர்பேணிசாப்பிடு, பணமே நீ எல்லாவிருந்தும் சாப்பிடு என்றுசொல்லி சற்றுஇருந்து, விருந்தெல்லாம் பணத்திற்க் காக ஏற்பட்டபடியால் பணம் இருந்து சாப் பிட்டு விட்டது, நான்போய் வருகிறேனென் று போய்விட்டாள். தமையனை ஊராரெல் லோரும் இகழ்ந்தார்கள். அதுபோல இப் பணமாயையை நம்பிக்கெடாத மனிதன்கிடை யாது. அப்பணம் கடைசியில் பெட்டியில்தா னிருக்கிறது. கூடவருகிறதில்லை. நல்லபெயர் தான் கூடவருகிறது. கெட்டபெயர் எடுத்து

பிறருக்கு தீங்கு செய்கிறவர்களுக்கு இங்கும் சுகமில்லை; பரலோகத்திலும் சுகமில்லை. இப்படி மகாதேவய்யர் எல்லோரும் கொண்டாடும்படி இருந்துவிட்டு உலகவாழ்க்கையை விட்டார்.

எஸ். இராமஸ்வாமி ஐயர், பி. ஏ.

# "MERRY WIVES" OF MODERN IND.

## [AFTER SHAKESPEARE'S "MERRY WIVES OF WINDSOR."]

(*By S. Ramaswami Aiyar, B.A.*)

# கற்பைக் காப்பாற்றிய பெண்கள்.

## இந்நாடகத்தின் வேஷதாரிகள்.

ராயபகதூர் பீமவர்மன்:

குணசுந்தரி, பானுமதி, } இவர்கள் பேரில் காமங்கொண்டவன்.

காமசந்திரன்...மோகனமாலையின் பேரில் காதல் கொண்டவன்.

விக்ரமவீரன்.

கேசவதத்தன்...விக்ரமவீரன், மருமகன்.

வீரசேனன், உக்ரசேனன், } இரண்டு சிநேகிதர்கள்.

வாசலன் ..வீரசேனனுடைய மகன்.

ப்ரதாபன்...கேசவதத்தனுடைய சிநேகிதன். பள்ளிக்கூடத்து வாத்தியார்.

சராக்ரமன்...வைத்தியர்.

பகுணன்...ஓர் பெரிய ஹோடல்காரன்.

எருப்பன், முத்தன், } உக்ரசேனன் ஆள்கள்.

மார்த்தாண்டன், முனியன், வெறியன், வக்ரன்; } பீமவர்மனுடைய ஆள்கள்.

சுசீலன்...கேசவதத்தனுடைய வேலைக்காரன்.

வீரன்...பாரக்ரமனுடையவேலைக்காரன்.

பானுமதி...உக்ரசேனன் பெண்சாதி.

குணசுந்தரி...வீரசேனன் பெண்சாதி.

மோகனமாலை...வீரசேனன்பெண்; காமசந்திரன் பேரில் காதல்கொண்டவள்.

பத்மினி...பராக்ரமன் சமையற்காரி.

### ௰வது அங்கம்.

### காக்ஷி. 3

சுகுணன் ஹோட்டல்.

சுகுணன்:—எந்த வேளையில் இந்த தடிப்பயல் பீமவர்மன் நமது ஹோட்டலுக்கு வந்தானோ, அது முதல் நமக்கு ஜனங்கள் அதிகமாக இங்கே வருகிறதில்லை. அதிக வரும்படியும் வருகிறதில்லை. இனி சீக்கிரம் இவனை வீட்டைவிட்டு வெளியே அனுப்பிவிடுவது ரொம்பவும் நல்லது.

மார்த்தாண்டன் வருகிறான்.

மார்த்தாண்டன்:—சுவாமி, ஒரு பெரியஜமீன்தார் வந்திருக்கிறார். எத்தனை ஆள்களும், பிரபுக்களும்; கூடவந்திருக்கிறார்கள்! எத்தனை பெட்டிகள் வந்து இறங்கியிருக்கின்றன. அந்த ஜமீன்தாருக்கு நமது ஹோட்டலில் இறங்கவேண்டுமாம். தங்கள் குதிரைகள் எல்லாம் ஸ்டேஷனுக்குப் போகவேண்டுமாம். அவர் முக்கியமான காரியஸ்தர் ஒருவர் வந்து எல்லாம் சீக்கிரம் தயாராக வேண்டுமென்று சொல்லுகிறார்.

சுகுணன்:—(தனக்குள்) இதுதான் நல்லசமயம். என் குதிரைகளை அனுப்பி, அவரையும் அவருடைய ஆள்களையும் வீட்டில் வைத்துக்கொண்டால் நமது நஷ்டமெல்லாம் சேர்ந்து இதில் வசூல் செய்து விடலாம். ஒரு வருஷத்து வரும்படி இவர் ஒருவரிடத்திலிருந்தே சம்பாதித்து விடலாம். அடே எத்தனை நாள் இருப்பார்கள்.

மார்த்தாண்டன்:—சுவாமி! அவர்கள் இன்னும் 15 நாள் இங்கே இருக்கவேண்டுமாம். அவர்கள் இங்கே இருக்குமளவும் தங்கள் குதிரைகள் அவர்களிடத்திலேயே இருக்கவேண்டுமாம். அவை இங்கே போகிறது வருகிறது என்றுகூட தாங்கள் கவனிக்கக்கூடாது என்று சொல்லுகிறார்கள்.

சுகுணன்:—அப்படியானால் எப்போதும் அவர்களுக்கு வேண்டியிருக்கும்போலிருக்கிறது. நல்ல பணக்காரர்போலிருக்கிறது. நாம் மாட்டேனென்று சொல்லலாமா. நாமே அவர் இங்கே இறங்குவதற்கு சிபார்சுகள் செய்திருக்கவேண்டும். இப்படிப்பட்ட சமயம் கிடைக்குமோ. அடே என்ன கொடுப்பார்கள்?

மார்த்தாண்டன் :—போகும்போது மொத்தமாக 1000ரூ யும் தக்கபரிசுகளும் கொடுப்பதாக சொல்லுகிருர்கள். நல்ல அறை அவருக்கு தகுந்ததாக வேண்டுமென்கிருர்களே சுவாமி எந்த அறையை தருகிறது.

சுதுணன் :—வேறு நல்ல அறை அவருக்கு தகுந்தது எங்கே இருக்கிறது. இருப்பதற்குள், நமது கஜானு அறைசகுப் பக்கத்து அறைதான் அவருக்குத் தகுந்தது. அதை ஒழித்துவிடு.

மார்த்தாண்டன் :—அந்த அறையைப் பற்றியும் அவர்கள் இருக்குமளவும் ஒன்றும் கவனிக்ககூடாதென்றும், நமது ஆள்கள் அதன் பக்கத்தில்கூட வரக்கூடாதென்றும் சொல்லுகிருர்கள்.

சுதுணன் :—நல்லது அப்படியானுல் நமது ஆள்களுக்கு அப்படியே சொல்லி திட்டம் செய்துவிடு. அடே, இதில் நல்ல வரும்படி கிடைக்குமென்று உனக்குத் தோன்றுகிறதா.

மார்த்தாண்டன் :—சுவாமி, இது தான் தகுந்த சமயம். காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்ளவேண்டும். அவர்கள் அறைக்குள் என்ன செய்தால் என்ன! நமது குதிரைகளை எங்கேகொண்டுபோனுல் என்ன! இன்றைக்கு பதினைந்தாம் நாள் கையில் ரூ 1000 வந்துவிடுகிறது.

நல்லது நான்போய் அவர்கள் இறங்கச் செய்யவேண்டிய எற்பாடுகள் செய்கிறேன்.

(போகிருன்.)

சுதுணன் :—ஒருவேளை இதுவும் பீமவர்மனதிர்வ்ஷ்டம்தானே, என் அவனை வீணில் போகச்செய்ய வேண்டும். கொஞ்சம்நாள் இன்னும் பார்ப்போம்.

(போகிருன்)

---

காக்ஷி. 4

உக்ரசேனன் வீட்டில் ஓர் அறை.
வீரசேனன், உக்ரசேனன், ப்ரதாபன்,
குணசுந்தரி, பானுமதி, வருகிருர்கள்.

ப்ரதாபன் :—பெண் பெண்டாட்டிகள் என்ருலும் எல்லாரும் பெண் பெண்டாட்டிகளாவார்களா. இவர்களைப்போல் புத்தியுள்ள பெண்களை நான் பார்த்ததில்லை, இருவர்கள் சேர்ந்து, இவர்களைப்போல் பெங்குபெருமனுள்ளவனை ஏமாற்றியிருக்கிருர்களே. கடைசியில் புத்திதான் பெரிது. தேகம் எத்தனை பெரியதாயிருந்து என்ன செய்கிறது.

வீரசேனன் :—உங்கள் இருவர்களுக்கும் ஒரே காலத்திலேயோ இந்த இரண்டு கடிதங்களையும் அனுப்பினுன்.

குணசுந்தரி :—கால் மணிக்குள்ளாக.

உக்ரசேனன் :—பானு, என்னை மன்னிக்கவேண்டும். உன் சங்கதி தெரியாமல் வீணில் நான் சந்தேகப்பட்டேன் இனி நான் சூரியனிடம் பனி இருக்கிறதென்ருலும், நெருப்பிற்குள் நீர் இருக்கிறதென்ருலும் நம்புவேன். என் பானுகெட்ட நடத்தையுள்ளவளென்று யார் சொன்னபோதிலும் நம்பமாட்டேன். சற்றுமுன் யார்சொன்னபோதிலும் கேளாமல் சந்தேகப்பட்டதும் நான் தான். இப்போது யார் விரோதமாகச் சொன்னபோதிலும் நம்பக்கூடாதவனும் நான்தான்.

வீரசேனன் :—உக்ரசேனு போதும். சந்தேகங்களில் அதிகமாகப் போகிறதுபோலவே, ஸ்தோத்திரத்திலும் அதிகமாகப்போகவேண்டாம். எதாவது ஒன்று யோஜிப்போம். இந்த வேடிக்கைகளெல்லாம் நாம் நேரில் மறுபடியும் பார்க்கவேண்டாமா நமது பெண்பெண்டாட்டிகள் அவனுக்கு ஆசை வார்த்தை காட்டி மறுபடியும் வேறு இடத்தில் அவன் சந்திக்க எற்பாடுசெய்யட்டும். நாம் அங்கே அந்த கொழுத்தபயலை கையும் களவுமாய் பிடித்து நன்ருய் அவமானப்படுத்திவிடுவோம்.

உக்ரசேனன் :—நமது பெண்பெண்டாட்டிகள் சொன்ன எற்பாட்டைத்தவிர வேறு எற்பாடு எனக்கு ஒன்றும் தோன்றவில்லை.

வீரசேனன் :—என்ன எற்பாடு? பாதிராத்திரியில் பொது ஜனங்கள் கூடும் மைதானத்தில் வந்து சந்திக்கும்படியா. ஒருபோதும் அவன் அங்கே வரமாட்டான்.

ப்ரதாபன் :—இனி அவன் உங்களை பார்ப்பானென்று சொப்பனத்திலும் எண்ணவேண்டாம். நீங்கள் அவனை நதியில் எறிந்திருக்கிறீர்கள், கிழவியாய் போகும்போது பலமாய் அடித்திருக்கிறீர்கள். இத்தனை கஷ்டப்பட்டும், அவனுக்கு மனதில் பயமில்லாமலிருக்குமா. அவன் பட்டிருக்கும் அடியில் பெண் பெண்டாட்டிகள் பேரில் பொதுவாய் அவனுக்கு இருக்கும் ஆசைகூட நீங்கியிருக்கும். அவனவது மறுபடியும் இங்கே வரவாவது.

வீரசேனன் :—எனக்கும் அப்படித் தான் தோன்றுகிறது.

பானுமதி :—அவனை அந்த இடத்தில் கொண்டுவர நாங்கள் எற்பாடு செய்கிருேம். கொண்டுவந்தால் அவனை இவ்விதமாய் அவமானப் படுத்துகிறது என்பதை நீங்கள் யோஜித்துக் கொள்ளுங்கள்.

உக்ரசேனன் :—அவன் மறுபடியும் சொல்லியனுப்பினுல் வருவான் என்பதில் சந்தேகம் ஒன்றில்லை. தண்டிக்கவேண்டிய விதத்தைத் தான் நாம் இப்போது யோஜிக்கவேண்டும்.

குணசுந்தரி:—நான் சொல்வதைக்கேளுங்கள். இந்த ஊரில் வெகுநாளாக வழங்கிவருகிற ஒரு கதைகேட்டிருக்கிறீர்களல்லவா. இந்த ஊர்வெளிப்புறத்து மைதானத்தில் ஒரு பெரிய ஆலமரமும், அதன் கீழ் ஒருவேலும் நட்டு, அதன் பக்கத்தில் ஒரு பெரிய சங்கிலியில் மணிகோர்த்து தொங்குகிறதல்லவா. அதில் சங்கிலி வீரன் என்னும் ஒரு தெய்வம் தினம் பாதிராத்திரியில், நெற்றியில் இரண்டு கொம்புகள் வைத்துக்கொண்டு, தன் பரிவாரங்களுடனும், அனேகம் கொள்ளிவாய் பிசாசுகளுடனும், வந்து பாடுகிறதும், கூத்தாடுகிறதும், அந்த சமயங்களில் பயங்கரமான சப்தங்கள் போடுவதுமல்லாமல், சங்கிலியில் கட்டியிருக்கும் மணியை பலமாக ஆட்டி எல்லோருக்கும் பயத்தை உண்டு பண்ணுவதால், அந்த மரத்தினருகில், ராத்திரியில் போகக்கூடாது என்று எல்லோரும் சொல்லுவதை நாம்கேட்டதில்லையா. அந்தவேளையில் எந்தமனிதன் எதிரில் அகப்பட்டபோதிலும் அவன் சாம்பலாய்ப் போய்விடுவதாகவும், எந்த மரம் அவைகள் கண்ணில் பட்டபோதிலும் அது பட்டுப்போய் விடுவதாகவும், பசுக்கள் மாடுகள் அகப்பட்டதுகளெல்லாம், பாலுக்கு பதிலாய் ரத்தமாக கறக்கும்படிசெய்து பிறகு இறந்து போகச்செய்து விடுவதாகவும், ஜனங்கள் சொல்லிக்கொள்வதையும், இந்த நம்பிக்கை நமது பெரியோர்கள் நாள் முதல் ஏற்பட்டு வெகு காலம் இந்த ஊரில் வழங்கிவந்ததை கேட்டிருக்கிறீர்களல்லவா.

வீரசேனன்:—இப்போது கூட எத்தனைபேர்கள் ராக்காலததில் அந்த ஆலமரத்தண்டைபோகப் பயப்படுகிறார்கள். இன்னும்கூட ஒருவரும் அங்கேபோகிறதில்லையே. ஆனால் அதைப்பற்றி யென்ன.

பானுமதி:—நீங்கள் யோஜித்திருக்கிறது என்னவென்றால், பீமவர்மனை பெரிய கொம்புகள் வைத்துக்கொண்டு சங்கிலிவீரன்போல் வேஷம் போட்டுக்கொண்டு அந்த மரத்தண்டையில் வந்து எங்களை சந்திக்கவேண்டியது என்று ஏற்பாடு செய்கிறோம்.

வீரசேனன்:—அவன் அந்த வேஷத்துடன் அங்கே வருவான் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் வந்த பிறகு அவனை என்ன செய்வதாக உத்தேசம். அதற்கு என்ன யோஜனை செய்திருக்கிறீர்கள்.

குணசுந்தரி:—அதற்கும் நாங்கள் ஏற்பாடு செய்திருக்கிறோம். என்னவென்றால் என் பெண் மோகனமாலைக்கும் என் பையன் வாசவனுக்கும் அவனைப்போல இன்னும் 4, 5 பையன்களுக்கும், பிசாசுகள்போல வேஷம் போட்டு, மோகனத்தை அதுகளுக்கு ராணிபோல் ஏற்பாடு செய்து அவர்கள் தலையில், கொள்ளிவாய்ப் பிசாசுபோல ஒவ்வொருவருக்கும் வர்த்திகளைக் கொளுத்தி கட்டிவைத்து கைகால்களில் மணியும் சலங்கையும் கட்டிவிடுகிறது. பீமவர்மனும் நாங்களும் சந்தித்த உடனே, திடீரென்று ஒரு மறைந்திருந்த குழியிலிருந்து, வெளிச் சத்துடன், கூச்சலிட்டுக்கொண்டு இவர்கள் எழுந்திருக்கட்டும். நாங்கள் இருவரும் பயந்தாப்போல ஓடிப்போய் விடுகிறோம். உடனே அவர்களெல்லாம் பிசாசுகள் வழக்கம் போல் கூத்தாடிக்கொண்டு வந்து அவனை சுற்றிக்கொண்டு, அவன் ஏன் அந்த சமயத்தில், அந்த இடத்தில் கெட்ட காரியத்துக்காக, சுவாமிபோல் வேஷம் போட்டுவந்தானென்றும் அவன் பாபதேகத்தையும், பாபக்கால்களையும் ஏன் அந்த புண்யஸ்தலத்தில் வைத்தானென்றும், அவனை பிசாசுகள் ஊசியால் குத்தட்டும்.

பானுமதி:—அவன் உண்மையை ஒப்புக்கொள்ளுகிற வரையில் இந்த வேடிக்கைப் பிசாசுகள் அவனை வர்த்தியால் கொளுத்தட்டும்.

குணசுந்தரி:—பிறகு உண்மையை அவன் ஒப்புக்கொண்ட உடனே பிசாசுகள் ஓடிவிடட்டும். நாமெல்லாரும் உடனே சேர்ந்து அவனைக் கேலிபண்ணி, பட்டணத்தில் கூட்டிக்கொண்டு வருவோம்.

உக்ரசேனன்:—பையன்களுக்கு இதுகளெல்லாம் நன்றாய் சொல்லிவைக்கவேண்டும். இல்லாவிட்டால் அவர்களால் ஒன்றும் செய்யமுடியாது.

ப்ரதாபன்:—நீங்கள் இதற்காக யோசிக்கவேண்டாம். நான் பையன்களுக்கு தனியாக வேஷம் போட்டு, ஒவ்வொருவனும் சொல்லவேண்டியதையெல்லாம் சொல்லி பாடம் பண்ணிவைக்கிறேன். நானும் ஒரு பிசாசு வேஷம் போட்டுக்கொண்டு அவனை நான கொளுத்துகிறேன்.

உக்ரசேனன்:—நல்லது நான்போய் பிசாசு வேஷத்துக்கு வேண்டிய சாமான்களெல்லாம் வாங்கி வருகிறேன்.

குணசுந்தரி:—எங்கள் மோகனம் பிசாசுகளுக்கு ராஜாத்திபோல நல்ல பச்சைஉடுப்பு போட்டுக்கொள்ளட்டும்.

வீரசேனன்:—நான் போய் மோகனத்துக்கு தகுந்த வெள்ளைப் பட்டுவாங்கிவருகிறேன் (தனக்குள்) கேசவதத்தனுக்கு சொல்லி, அந்த சமயத்தில் ரகசியமாக வந்து, மோகனத்தை கூட்டிப்போய், தென்புரத்துக்கோவிலில் புரோகிதர், வைதீகர்களை, ரகசியமாக வைத்துக்கொண்டு கலயாணத்தை நடத்திவிடச் சொல்லுகிறேன். வேளையும் நல்லவேளையாகத்தான் இருக்கிறது. நல்லது சீக்கிரம் பீமவர்மனுக்கு சொல்லியனுப்புங்கள்.

உக்ரசேனன்:—நானும் அவனிடம் கமலாகரர் வேஷம் போட்டுக்கொண்டு போகிறேன். என்னிடம் எல்லாம் அவன் உண்மையைச் சொல்லிவிடுவான். மறுபடியும் போகும்படிக்கும் நான் சொன்னபோதிலும் கேட்ப்பான்,

குணசுந்தரி :—நீர் போய் பிசாசுகளுக்கு வேண்டிய உடுப்புகள் ஆபரணங்கள் எல்லாம் வாங்கிவர வேண்டும்.

ப்ரதாபன் :—நானும் போய் என்காரியத்தை பார்க்கிறேன். இது ரொம்பவும் வேடிக்கையாயிருக்கிறது. வீரசேனன், (உக்ரசேனன் ப்ரதாபன், போகிறார்கள்.)

குணசுந்தரி :—பானுமதி, நீ சீக்கிரம் பத்மினியை அனுப்பி அவன் மனதை தெரிந்துவரச்சொல். ஒருவேளை பீமவர்மன் மறுதளித்துவிட்டால் நமது காரியங்கள் வீணாகிவிடும். (பானுமதி போகிறாள்.) இதோ நான் வைத்தியரிடம் போகிறேன். அவருக்குத்தான் என் மோகனத்தை கொடுக்கப்போகிறேன். அந்த கேசவதத்தனுக்கு பணம் இருந்து என்ன செய்கிறது. சுத்த முட்டாளாக இருக்கிறானே. என் புருஷனுக்கோ அவனுக்கே கொடுக்க வேண்டுமென்றிருக்கிறது. டாக்டருக்கோ பணமும் இருக்கிறது. அவர் சிநேகிதர்களெல்லாம் வெகு பெரியமனுஷர்களாக இருக்கிறார்கள். ஆதலால் அவரைவிட, இன்னும் 1000பங்கு பெரியவர்கள் வந்து கேட்டால் கூட நான் மோகனத்தைக் கொடுப்பதில்லை. இதுதான் நல்ல சமயம் என் புருஷனுக்குத் தெரியாமல், வைத்யரை ரகசியமாக கூப்பிட்டு, ராத்திரி ஆலமரத்தடியில் ஒளித்திருக்கும்படிக்கும், மோகனத்தை ரகசியமாக கூட்டிப்போய் கலியாணம் செய்து கொள்ளும்படிக்கும் சொல்லி ஏற்பாடு செய்கிறேன். (போகிறாள்.)

---

## காக்ஷி 5.

சுகுணன் ஹோட்டல் ஓர் அறை.

சுகுணன், சுசீலன் வருகிறார்கள்.

சுகுணன் :—அடேமுட்டாள் உனக்கு என்ன வேண்டும். சீக்கிரம் சொல் யஜமானனுக்குத் தகுந்த சிஷியன் தான். சீக்கிரம் சொல் உளறாதே வண்ணான்வீட்டு வாகனமே.

சுசீலன் :—பீமவர்மனிடம் எனது யஜமானனுக்காக பேசவந்திருக்கிறேன்.

சுகுணன் :—நல்லது அவனிருக்கும் அறை அதோ உயரமிருக்கிறது. அங்கேபோய் கதவை இடித்து கூப்பிடு, அவனைப் பார்க்கலாம்.

சுசீலன் :—இல்லை நான் வந்தகாரியம் வேறு இருக்கிறது.

சுகுணன் :—அடே குப்பைமேட்டுப் புலியே உனக்கு முன்னமே உளறாதே என்று நான் சொல்லவில்லையா, என்ன காரியம் சொல்.

சுசீலன் :—ஒரு பெருத்த தேகத்தையுடைய கோஷாப்பெண், அவருடைய அறையில் போயிருக்கிறாள். அவள் ஜோஸியம் தெரிந்தவள். அவள் கீழேவரும் வரையில் இவ்விடமிருக்கிறேன். நான் அவளுடன் பேசவேண்டும்.

சுகுணன் :—கொழுத்தவளா ஒருவேளை திருடியாயிருந்தாலும் இருக்கலாமே, ஓகோ எதையாவது திருடிக்கொண்டு போய்விட்டால் என்ன செய்கிறது. நல்லது பீமவர்மனைக் கூப்பிடுகிறேன். ஓய் பீமவர்மரே, உயர இருக்கிறீரா. நான் தான் சுகுணன் கூப்பிடுகிறேன். சீக்கிரம் பதில் சொல்லும். அங்கே யாரோ ஒரு பெருத்தபெண் கோஷா வந்திருக்கிறாளாமே அவள் யார் யாராவது திருடன் மாறுவேஷம் போட்டுவந்து எல்லாவற்றையும் திருடிவிடப்போகிறான். சீக்கிரம் அவளை வெளியே அனுப்பிவிடும். இங்கே ஒரு மண்டூகம் வந்து அந்த கோஷாவுக்காக, காத்திருக்கிறது.

பீமவர்மன் :—(தனக்குள்) இவனேது நம்மை இத்துடன் விடமாட்டான் போலிருக்கிறது. (கீழே வந்து) என்ன சங்கதி.

சுகுணன் :—யாரோ பெருத்தகோஷா உமது அறைக்கு சற்றுமுன் போனாளாமே அவள் எங்கே.

சுசீலன் :—சுவாமி சற்றுமுன் உங்களறைக்கு சென்றது ஜோஸியச்சி முராளீமீ அம்மாள் தானே.

பீமவர்மன் :—ஆமாம் அவள் தான் அவள் முன்னமேயே திரும்பி போய் விட்டாளே.

சுசீலன் :—சுவாமி அவளெப்படி அதற்குள் திரும்பிப்போயிருக்கக்கூடும். இப்போதுதான் என் யஜமானர் என்னைக்கூப்பிட்டு இதோ முராளீமீ கோஷா, சுகுணன் ஹோடலில் நுழைந்தாள் சீக்கிரம் பார்த்துவா என்று சொன்னார். நான் உடனே ஓடிவந்தேனே.

பீமவர்மன் :—அவள்தான் முன்னமேயே போய் விட்டாளென்று சொன்னேனே அவளால் உனக்கென்ன ஆகவேண்டும்.

சுசீலன் :—என் யஜமானர் அவளை ஒரு ஆரூடம் கேட்டுவரச்சொன்னார். என்னவென்றால் கொஞ்ச நாளைக்குமுன் அவரிடமிருந்து வெறியன் திருடிப்போன சங்கிலி அவனிடம இருக்கிறதா இல்லையா என்று கேட்டுவரச்சொன்னார்.

பீமவர்மன் :—நான் அதைப்பற்றி அந்த அம்மாளைகேட்டேன்.

சுசீலன் :—அவள் என்ன சொல்லுகிறாள்.

பீமவர்மன் :—எந்த மனிதன் உன்யஜமானனிடமிருந்து சங்கிலியை எடுத்தானோ அவனே திருடியிருக்கிறானென்றும் அந்த சங்கிலி இப்போது அவனிடத்திலேயேயாவது அல்லது வேறு யாரிடத்திலாவது நிச்சயமாய் இருக்கிறதென்றும் சொன்னாள்.

சுசீலன்:—எனக்கு இன்னும் அனேகம் சங்கதிகள் கேழ்க்கவேண்டி யிருக்கிறது. அவனை நான் நேரில் பார்த்தால் நல்லது! என் யஜமானன் இன்னொரு சங்கதி முக்கியமாக கேழ்க்கச்சொன்னார்.

பீமவர்மன்:—அதென்ன சொல்லு.

சுசீலன்:—ஒன்றுமில்லை என் யஜமானனுக்கு மோகனமாலை கிடைப்பாளா கிடைக்கமாட்டாளா என்கிற அதிர்ஷ்டத்தைப்பற்றி கேழ்க்கச்சொன்னார்.

பீமவர்மன்:—அதையும் நான் கேட்டுவிட்டேன். உன் யஜமானனுக்கு அதிர்ஷ்டம் இருக்கிறது.

சுசீலன்:—என்ன அதிர்ஷ்டம் சுவாமி.

பீமவர்மன்:—கிடைப்பாள் கிடைக்கமாட்டாளென்கிற அதிர்ஷ்டம்தான்.

சுசீலன்:—நல்லவேளை சுவாமி.

பீமவர்மன்:—நீ சீக்கிரம் உன் யஜமானனிடம் போய் கோஷா அம்மாளே இப்படியெல்லாம் சொன்னாள் என்று சொல்லிவிடு.

சுசீலன்:—நல்லது நான்போய் இந்த சந்தோஷமான சமாச்சாரத்தை என் யஜமானனுக்கு சொல்லுகிறேன். (போகிறான்.)

சுகுணன்:—பீமவர்மரே உமது சாமர்த்தியத்தை நான் என்னவென்று சொல்லட்டும். ஜோஸியம் கூட கற்றுக்கொண்டுவிட்டீரே. யதார்த்தமாக உமது அறைக்கு அந்த கோஷா அம்மாள் வந்திருந்தாளா.

பீமவர்மன்:—ஆமாம் வந்திருந்தாள். அவளிடம் ஜோஸியம் ஒரு நிமிஷத்தில் கற்றுக்கொண்டு அவளாகவே ஆகிவிட்டேன். நான் இதுவரையில் இத்தனை வயதுக்குள் கற்றுக்கொள்ளக்கூடாத வித்தையெல்லாம் இப்போது கற்றுவிட்டேன். ஜோஸியம் கற்றுக்கொள்வதற்காக அந்த அம்மாளுக்கும் நான் ஒன்றும் கொடுக்கவில்லை. ஆனால் கற்றுக்கொள்ள ஆரம்பித்ததிலேயே, நான் அந்த அம்மாளாகவே ஆகி அதற்குள் அந்த ஜோஸியத்துக்காகவேண்டிய பரிசுகளையும் ஒரு நிமிஷத்தில் பெற்றுக்கொண்டேன். எனக்கும் வெகுநாள்களுக்கு இந்தப்பரிசுகள் ஞாபகத்திலிருக்கும்.

மார்த்தாண்டன் ஓடிவருகிறான்.

மார்த்தாண்டன்:—சுவாமி நமது குதிரைகளையும் காணோம். வந்த ஜமீன்தாரனையும் காணோம். அவருடைய ஆள்களையும் காணோம் அவர்கள் தங்கியிருந்த அறைக்குள்போய் பார்த்தேன் அங்கே அடுத்த அறைக்கு கன்னம்வைத்து கஜானாவில் இருந்த தண்டவாளப்பெட்டியும் பெயர்த்து எடுக்கப்பட்டிருக்கிறது. உள்ளுக்குள்ளேயே கன்னம் வைத்து ராத்திரியே எல்லாவற்றையும் பெயர்த்து எடுத்துப் போயிருக்கிறார்கள்.

சுகுணன்:—(தனக்குள்) அய்யோ இந்த பீமவர்மனால்தான் இத்தனை கஷ்டங்களும் வருகிறது. நான் முன்னமேயே இவனை வீட்டைவிட்டு துலக்காமல் போனேனே (உறக்க) அய்யோ இதென்ன அக்ரமம் இதற்காகதானா ஜமீன்தாரனை வீட்டில் வைத்துக்கொண்டேன்.

மார்த்தாண்டன்:—சுவாமி அவர்கள் குதிரைகள் எங்கே போகிறது வருகிறது என்றுகூட கவனிக்க கூடாது என்று சொன்னார்களே அப்பொழுதே எனக்கு கொஞ்சம் சந்தேகமாயிருந்தது. நானும் அதை தங்களிடம் சொன்னேன். அறைக்குப்பக்கத்திலும் வரக்கூடாதென்று சொன்னார்களே. அட, பாவிகளா, கொஞ்சம் பணமா. குதிரைகள் தான் சாதாரணக்குதிரைகளா.

சுகுணன்:—நானும் ஒரு ஜமீன்தாரன் என்றே நம்பியிருந்தேன் அவன் இப்படி திருடனாயிருப்பானென்று எனக்கு எப்படி தெரியும். நான் என்ன செய்யட்டும் அடே எங்கேயாவது தேடிப்பார்த்தாயா. ஒருவேளை பக்கத்து ஊர்களுக்கு போயிருப்பார்களோ.

ப்ரதாபன் ஓடி வருகிறான்

ப்ரதாபன்:—சுகுணா உன் வீட்டில் இறங்கின ஜமீன்தாரன் எங்கே அவன் ஊரில் இரண்டு மூன்று இடங்களில் பணங்களை கொள்ளையிட்டு போய்விட்டதாக எல்லோரும் அவனைத்தேடுகிறார்கள்.

சுகுணன்:—ஜமீன்தாரனாவது மண்ணாவது அவன் எதோ திருடர்களுக்கெல்லாம் தலைவன்போலிருக்கிறது. என்னையும் மீதியாகவிடாமல் ஏமாற்றிவிட்டு என் பணத்தையும் கொள்ளையிட்டு இது போதாமல் என் குதிரைகளையும் கொண்டு போய்விட்டான். ப்ரதாபா நான் என்ன செய்யட்டும்

இதற்கு. பராக்ரமன் ஓடிவருகிறான்.

பராக்ரமன்:—சுகுணன் எங்கே. சுகுணா ஜாக்கிரதை. அந்த ஜமீன்தாரனை நம்பாதே. அவன் திருட்டுப்பயல்.

சுகுணன்:—நீங்கள் எல்லோரும் திருட்டுப்போன பிறகு ஜாக்ரதை சொல்வதில் புலிகள் தான். குதிரைகள் களவுபோன உடனே தாமதிக்காமல் குதிரை லாயக்கதவை பூட்டி ஜாக்ரதை செய்து முத்திரைகூட போட்டு விடுவீர்கள். நான் தான் என்ன செய்யட்டும்! இப்படிப்பட்ட திருட்டுப்பயல் என்று தெரிந்திருந்தால் அவனை உள்ளே விடுவேனா. மார்த்தாண்டனும்எங்கும்தேடிப்பார்த்தான். அவன் யதார்த்த ஜமீன்தாரனாயிருந்தாலல்லவா அகப்படுவான். என் பணம் முழுவதும் போய்விட்டது. போதாததற்கு என் குதிரைகளும்போய்விட்டனவே இனி நான் என்ன செய்வேன்.

பீமவர்மன்:—சுகுணா, உன் பணமும் உன் குதிரைகளும் அக்கிரமமாக உனக்கு கிடைத்திருக்கும். ஆதலால் அக்கிரமமாக போய்விட்டது. நீயும் அக்கிர

மமாக பிறந்திருந்தால் உன்னையும் கொண்டு போயிருப்பார்களோ என்னவோ. ஆதலால் நீ கிரமமாகத்தான் பிறந்திருக்கிறாய் என்று தெரிகிறது. (தனக்குள்) சுவாமி நன்றாக வேண்டும். நான் ஏமாந்து போன பிறகு பூலோகம் முழுவதும் ஏமாந்தால் தான் என்ன. எனக்கு சந்தோஷம் தான். கொஞ்ச அடிபட்டேனா அந்த அயோக்யப்பயலிடம் சொத்தை குடுத்தாலும் குடுக்கலாம், அடிபடலாமா. இது போதாதென்று என் யோக்யதை ராஜாங்கத்தக்கு கூட தெரியும்படியான சந்தர்ப்பத்தில் வந்துவிட்டதே. நல்ல வேளையாய் தப்பிக்கொண்டேன். ஒரு போலீஸ்காரன் கண்டுகொண்டால் போதும். ராஜாங்கத்தில் என்னை தண்டிப்பதும் போராமல், எத்தனையோ திருட்டுத் தனங்களும் அயோக்யச் செயல்களும் செய்து சிரமப்பட்டு நான் சம்பாதித்த இந்த ராயபகதூர் பட்டத்தையும் இழக்க வேண்டியதிருக்கும். நல்ல வேளையாய் தப்பிப்பிழைத்தேன். நானே இப்படி ஏமாந்தபோது இவர்களெல்லாம் ஏமாறுவதற்கு கேழ்ப்பானேன்! ஏமாந்தல் தான் என்ன.?

(பத்மினி வருகிறாள்.)

நல்லது பெண்ணே நீ எங்கிருந்து வருகிறாய்?

(இருவரும் தனிமையாய் போகிறார்கள்.)

பத்மினி:—இருவரிடத்திலிருந்தும் வருகிறேன்.

பீமவர்மன்:—அவர்கள் இருவரும் எக்கேடுகெட்டுப்போனால் எனக்கென்ன. நான் பட்ட அவஸ்தை எனக்கு இன்னும் 10 ஜன்மங்களுக்குப் போதும். மனித தேகம் பொறுக்கக் கூடியதற்கு மேல் பொறுத்துவிட்டேன். இனிபோதும்! பானுமதிக்காக, பானுநதியில் ஒரு ஸ்னானம் வேண்டுமானாலும் செய்துவிடுகிறேன். நல்லது நீ போய்வராம.

பத்மினி:—இப்படி தாங்கள் கோபித்துக்கொள்ளுகிறீர்களே. நீங்கள் கஷ்டப் பட்டதையே சொல்லிக்கொண்டிருந்தால், அவள் கஷ்டப்பட்டதை நான் சொல்லவேண்டாமா. அதிலும், பானுமதி எவ்வளவு கஷ்டப்பட்டிருககிறாள். உங்களுக்காவது அடிபட்ட கஷ்டமட்டும் இருக்கும். பானுமதிக்கு இருவிதத்தில்கஷ்டம், புருஷனும் அன்றைக்கு கொல்லு கொல்லென்று கொன்றுவிட்டான். இது போதாதென்று அவளுக்கு தான் பட்ட அடியை விட, தன்னை நம்பி வீட்டிற்கு வந்த நீங்கள் பட்ட அடியை நினைத்து, தன் வருத்தத்தைக்கூட மறந்து உங்களுக்காக அவள் அழுகிறாள். தாங்கள் மட்டும் வந்து பானுமதியை நேரில் பார்த்தால், அவள் தேகத்தில் பட்ட அடியினால் அவள் உடம்பெல்லாம் நீலவர்ணமும், சிகப்புவர்ணமுமாக தழும்புகள் இருக்கின்றனவே யன்றி, அவள் பழைய வெள்ளை மேதகம் கொஞ்சமாவது தெரியவில்லை. தங்களுக்காக அவள் இவ்வளவு கஷ்டப்பட்டது போதாதா. அவள் இன்னும் என்ன செய்வாள்.

பீமவர்மன்:—பத்மினி நீ எனக்கு நீலவர்ணத்தையும் சிகப்பு வர்ணத்தையும் மட்டும் சொன்னாயே. என் தேகத்தைப்பார். நான் பட்ட அடியில், ஆகாயத்தில், வானவில் தோன்றுகிறதே அதனுடைய வர்ணங்கள் முழுவதும் என் சேகத்தில் இருக்கின்றனவே. இது போதாதென்று, சூன்யக்காரியென்று என்னை சர்க்காரில் பிடிக்கிறதற்கு இருந்தார்களே. நான் நல்ல வேளையாய் ஒன்றும் தெரியாத கிழவிபோல் பாசாங்கு செய்து, சீக்கிறம் வேகமாக வீடு வந்து சேர்ந்தவிட்டேன். இல்லாமற் போனால் யாராவது ஒரு சேவகன் என்னை சூன்யக்காரியென்று இன்னேரம் பிடித்து காவலில் வைத்திருப்பான். இது போதாதென்று குணசுந்தரியும் என்னை எவ்வளவு அவமானம் செய்துவிட்டாள் என் ராய்பகதூர் பட்டத்தை யெல்லாம் தூஷித்தாளே. இவள் சொல்லி யனுப்பியதாலல்லவா. நான் வந்தேன். அதற்காக குணசுந்தரி அந்த சந்தர்ப்பத்தில் இப்படி யென்னை அவமானப்படுத்தலாமா.

பத்மினி:—தாங்கள் குணசுந்தரியை அப்படி நினைத்தது பிசகு. அவள் வெகு பாசங்குக்காரி. அன்றைக்கு, பானுமதிக்காக அவள் தங்களிடத்தில் பிரியம் இல்லை போல பாசாங்கு செய்யும் பொருட்டு உங்களை கேலிபண்ணி யிருக்கிறாள். என்னிடத்தில் கூட அவள் இதை சொல்லி, அந்த காரணத்தையும் சொல்லி உங்களை மன்னிப்பு கேட்டுக் கொள்ளச் சொன்னாள். இன்றைக்குத் தான் என் யஜமானிகள் ஒருவருக்கொருவர் உங்கள் சினேகத்தை சொல்லிக்கொண்டு, இன்றைக்கு இருவரும் சேர்ந்து உங்களைக்காண யோஜித்திருக்கிறார்கள். ஏனென்றால் பானுமதியும் இந்த வினைகளெல்லாம் ஒருவேளை குணசுந்தரியை சேர்க்காததால் தான் வந்து இருக்குமோ என்று பயந்து அவளுக்கும் சொல்லி இப்போது இருவரும் சேர்ந்து விட்டார்கள். இனி உங்களுக்குபயம் ஒன்றுமில்லை.

பீமவர்மன்:—நல்லது ! நீ இங்கே வந்த காரியமென்ன.

பத்மினி:—நான் சாவகாசமாய் உங்கள். உள்ளே வந்து எல்லாவற்றையும் சொல்லுகிறேன். பிறகு உங்களுக்கு நிஜம் இப்படி யென்று தெரியும். தங்களுக்கும் திருப்திபடும். இந்தச் சரித்திரத்தைத் தருகிறேன். இதை நன்றாய் வாசித்து பார்த்து சகல சங்கதிகளையும் தெரிந்து கொள்ளுங்கள். என்ன செயகிறது, உங்கள் இருவருக்கும் மனம் ஒப்பித்தானிருக்கிறது பகவானுக்கு நல்ல மனது வரவில்லை. ஏதாவது சமயத்தில் இடைஞ்சலைக் கொண்டு வந்து விடுகிறார்.

பீமவர்மன்:—நல்லது என் அறைக்குவா. சாவகாசமாகப் பேசிக்கொள்ளலாம்.

(போகிறார்கள்)

(இன்னும் வரும்,)

## "PEACE AT LAST!"

"The British Press unanimously recognises the magnanimity, forbearance and foresight of Japan and gratefully acknowledges the invaluable services of President Roosevelt."

"In a Japanese official statement it is declared that the Emperor of Japan, responding to the dictates of Humanity and civilisation has, in a spirit of perfect conciliation and in the interest of peace, authorised his Plenipotentiaries to waive the question of reimbursement of war expenses and consented to a division of Saghalien upon terms mutually acceptable."—*Overland Mail Summary.*

"President Roosevelt has been inundated by congratulatory telegrams. Among the first received was one from King Edward and soon afterwards one from the Emperor William who declared that he was overjoyed."—*Ibid.*

"A Vienna paper scouts the Russian pretension that Russia gained the victory at Portsmouth. It says that if any victory was gained there was victory for the Japanese over themselves by crowning the heroism of the field with the harder heroism of self-conquest."
—*Ibid.*

# ஸமாதானம்.

பாவனமாத்ர ஸந்துஷ்டாய நம:

உ

ஓம்ஸ்ரீம்ஹ்ரீம்:

"பேதமாகியபாவனை பேணுவதெல்லாம்
ஏதமாகியபந்தமே யெனதியானெனுமால்
போதவாருயிர பேதபாவனை புரிவஃதே
மாதராயுயிர்முத்தி யென்றுரைத்திடுமறையும்."

சென்ற 19-மாசகாகாலமாக ருஷியாவுக்கும் ஜெப்பானுக்கும் நடந்துவந்த சண்டையானது யூனைடைட் ஸ்டேட்ஸ் ப்ரெஸிடெண்ட் மிஸ்டர் ரூஸ்வெல்ட் அவர்களுடைப் பெருமுயற்சியாலும் இங்கிலாந்தினுடைய ஆதரவினாலும் இருதாரத்தாருக்கும் ஸமாதானமுண்டாகி உடன்படிக்கையு மேற்பட்டுவிட்டது. இருதாரத்தாரும் மஞ்சூரியாவைக் காலிசெய்து விடவேண்டியது. கொரியா ஜப்பான் ஆதீனத்திலிருக்கவேண்டியது. ஹார்பினுக்கு இப்பாலுள்ள ரயில்பாதைகளையெல்லாம் ஜப்பான்வசமாக ஒப்புவித்து விடவேண்டியது. 'ஸாகாலீன்' என்னும் தீவை இருபகுதியாகப் பிரித்து ஜப்பான் ஒருபகுதியும் ருஷியா ஒருபகுதியுமாக எடுத்துக்கொள்ளவேண்டியது. நடந்த சண்டையில் ஜப்பானுக்கு நேர்ந்த செலவுக்கு நஷ்டங்கட்டிக் கொடுக்கவேண்டி ஒரு பெருந்தொகை ருஷியா ஜப்பானுக்குக் கொடுக்க வேண்டுமென்றும், மூழ்கிப்போன கப்பல்களையெல்லாம் ஜப்பானுக்குக் கொடுத்துவிடவேண்டுமென்றும் இன்னுமுள்ள சில நிபந்தனைகளும் ருஷியா சக்ரவர்த்தியால் ஏற்றுக்கொள்ளப் படாமையாலும், அந்நிபந்தனைகளின்றி ஸமாதானம் முடியாதென்று ஜப்பான் சக்ரவர்த்தி சொன்னமையாலும், இந்த சமாதானம் இடையே தவறுதலுற்று நழுவிவிடும்போலிருந்தது. நடந்தயுத்தத்தில் ஜப்பானியர்கள் எல்லாச் சண்டையிலும் ஜயித்தேவந்தாலும் ருஷியர்களுடைய தேச எல்லைக்குள் இன்னும் பிரவேசித்தார்களில்லை. அவர்களுக் கந்நியமாயிருந்து அக்கிரமமாய் சொந்தம் பாராட்டிவந்த மஞ்சூரியாவை விட்டு மட்டும் வெருட்டப்பட்டார்களே யன்றி ருஷிய எல்லைக்குள் ஜப்பானியர் இன்னும் பிரவேசிக்கவில்லை. ஜப்பானியர்க்கு ருஷியர் மஞ்சூரியாவில் செய்துவந்த அட்டூழிய அக்கிரமங்களை யடக்க வேண்டுமென்பதேயன்றி ருஷியாவின்மீது படையெடுத்து நூதனதேசங்களை ஜயித்துக் கட்டியாள வேண்டுமென்கிற எண்ணமில்லை. தன்னிலை தவருது இருக்க ருஷியாவால் இடையூறு இல்லாமலிருக்கவேண்டுமென்பதே அவர்கள் கருத்து. அவர்களது இந்த எண்ணம் நன்ருக நிறைவேறிவிட்டது. இனி பணத்துக்காகமட்டும் சண்டைபோடுவதில் அவர்களில் மேன்தன்மையுள்ளவர்களுக்கு இஷ்டமில்லை. ஏனெனில் வீணுகச் சண்டைசெய்கிறதினல் பல்லாயிரம் உயிர்கள் வீணே சண்டைமுகத்தில் விழுந்து சேதமாவதன்றி உலகத்திலுள்ள மற்ற ஜனங்களுக்கும் போக்குவரத்து வியாபாரங்களுக்கும் மற்றப்படியுள்ள ஜனக்ஷேம விர்த்திக்கும் இடையூருயிருப்பது பெரும்பழிபாவத்துக்குக் காரணமாகிறது. இதை ருஷியர்கள் செறுக்கேறி மதிக்காவிட்டாலும், ஜப்பானியர்களும் கர்வங்கொண்டு பிடிவாதம் செய்யாமல் ஜயம்பெற்று தங்களுக்குண்மையாயுரிய லாபத்தை ஜனங்களுக்கு நேரக்கூடிய உயிர்ச்சேதத்தை யுன்னிவிட்டுக்கொடுத்தது அவர்களது தர்ம சிந்தையையும் ஜயகாலத்திலுமுள்ள தன்னடக்கத்தையும் காட்டுவதாயிருக்கிறது. யுத்தத்தில் அவர்கள் தங்கள் பராக்கிரமத்தைக் காட்டியதுபோல, ஜயத்தில் தங்களுடைய அமைதியையும் பொறுப்பையும் காட்டி உலகறிய உண்மைக்கீர்த்தி பெற்ருர்கள். இடையே இச்சமாதானம் இனிது முடிய இங்கிலாந்து ஒருவிதத்தில் பேருதவியாயிருந்தது கவனிக்கத்தக்கது. இதற்குமுன் இங்கிலாந்துக்கும் ஜப்பானுக்கும் ஒருவித ஐக்கிய உடன்படிக்கை யிருந்தாலும், அதில் அந்நியராஜாங்கத்தார் ஒருவர்க்கு மேற்பட்டு வந்து ஜப்பானையோ இங்கிலாந்தையோ எதிர்த்தால்தான் அவர்கள் ஒருவர்க்கொருவர் ஒத்தாசை செய்யவேண்டுமென்றும் ஏகதேசமாக ஒரு இராஜாங்கத்தோடு சண்டைநேரிட்

டால் மற்றேரிராஜாங்கத்தார் அச்சண்டையின் இடையே புகுந்து இடையூறு செய்யாமல்மட்டும் பார்த்துக்கொள்ள வேண்டுமென்றும் இருந்தது. இப்பொழுது புதிதாகச் செய்துகொண்டிருக்கும் ஐக்கியவுடன்படிக்கையினால் ஏகதேசத்தில் ஒரு இராஜாங்கத்தாரோடு சண்டை நேர்ந்தாலுங்கூட ஒருவருக்கொருவர் சாதகபாதகவழிகளில் எவ்வாற்றானும் ஒத்தாசை செய்யவேண்டுமென்று சண்டிருக்கிறது. இதனால் ருஷியாவினால் இந்தியாவுக்கு அபாயம் நேர்ந்தால், ஜப்பானியர் மஞ்சூரியாபக்கத்தில் ருஷியரைத் தாக்குவார்கள். ருஷியர் மஞ்சூரியாபக்கத்தில் ஜப்பானியருக்கு இடையூறுசெய்து சண்டைவிளைந்தால், பிரிடிஷ் இராஜாங்கத்தார் மத்திய ஆசியாவில் புகுந்து ருஷியரைத் தாக்குவார்கள். இப்படி பரஸ்பரம் இருவருக்கும் அந்நியோந்நியசிநேகம் ஏற்பட்டதால் ஜப்பான் சக்கிரவர்த்தியும் அவருடைய ஆலோசனை சபையாரும் இந்த யுத்தத்தால் நேர்ந்த திரவியநஷ்டத்துக்கு ஈடு வாங்காமலும் மிஸ்டர் ரூஸ்வெல்ட் அவர்கள் எடுத்துக்கொண்ட பெருமுயற்சிக்கும் இங்கிலாந்தின் சிநேகதாக்ஷண்யத்துக்குமுட்பட்டு சமாதான உடன்படிக்கை செய்துகொள்ளச் சம்மதித்தார்கள்.

இப்பொழுது ஜப்பான் அங்கிலேய மாதரசிக்கு அந்நியோந்நிய ஆப்தபந்துவாக வானதன்றி அமெரிக்கா ஐக்கியமாகாணத்துக்கு அருமையான மருமகபாத்தியம் பூண்டதாகவுமாகிறது. இந்தசமாதானவுடன்படிக்கைக்கு நஷ்டம்கட்டி வாங்காமல் சம்மதித்ததினால், ஜப்பானிலுள்ள சாமான்யஜனங்கள் கேட்பார் பேச்சைக்கேட்டுக் கலகம்செய்து கிளம்பி உள்நாட்டு மந்திரியின் கிரகத்தை நெருப்புவைத்துக்கொளுத்தினதன்றி பதினெட்டு போலீஸ் ஸ்டேஷன்களையும் சில கிறிஸ்து கோவில்களையும் பள்ளிக்கூடங்களையுங்கூடத் தாக்கித்தகர்த்து நெருப்புக்கிரையாக்கிவிட்டார்கள். எந்ததேசத்திலும் எக்காலத்திலும் நல்லவர்களும் கெட்டவர்களும் கலந்தேயிருப்பார்கள். ஒருவிதத்தில் பாரதூரயோசனைசெய்து நன்மைகடைப்பிடித்து ஒரு நற்காரியத்தைச் சாதிக்க முயன்றால், "நல்லகாரியத்திற்கு நாலாயிரந்தடை" யென்பதாக அதற்கு எத்தனையோதடைகள் நேரிடுகின்றன. ஒருவன் உலகெல்லாம் விட்டொழித்து ஒண்டியாயிருந்து ஆண்டியாய்த் தவம்செய்து ஆத்மலாபம்பெற்றுக் கடைத்தேறலாமென்று முயற்சித்தால் எல்லாவற்றையும் அவன் விட்டொழித்தும் அவனை உலகம் விடாதுபற்றி அவனைப்பாதித்து வருகிறது. இந்த வாதனைபொறுக்க ஆற்றாமலே மஹாதபஸிகள் அநேகர் காடுமலை வனாந்திரங்களையடைந்து மனுஷசஞ்சாரமில்லாத இடம் நாடித் தபசியற்றச் செல்கிறார்கள். அங்கு சென்றும் அவர்களுடைய வாசனாரூபமான பிரதிபந்தங்கள் தேவதாரூபமாகவும் பைசாசரூபமாகவும் அவர்களைப் பின்தொடர்ந்து பாதிக்கின்றன. இப்படி யேசுகிறிஸ்து ஸ்வாத்மதரிசனம் கண்டபின் தனியிடத்திலிருந்து சமாதிபழகி அந்நிலையில் உறுதியாய் நிற்கயத்தனித்தபொழுது மாயாசக்தியின் முக்கியரூபமான சைத்தான் அவரிடம் அங்கும்சென்று இல்லாத அதிசயங்களெல்லாம் காட்டி நயபயமாகப் பலவிதத்திலும் அவருக்கு ஆசைகாட்டி மோசம் செய்ய யத்தனித்தது. அதற்கெல்லாம் அவர் இடங்கொடுக்காது அதிதீவிரதா வைராக்கியத்தோடு தன்னிலைதவறாது பாதுகாத்து ஆத்மானுபவ சித்தி பெற்ற பின்னும், அவர் உலகுக்குபகாரமாயுழைத்து வந்த பொழுது அவர் சிஷ்யர்களைக்கொண்டே யவரைக்கெடுக்க யத்தனித்தது. அவருடைய பிரதமசீஷராகிய பீட்டர் அவருடைய சத்தியவாக்குக்கு விரோதம் செய்தபோது அவர் மாயைசெய் ஜாலத்தை யுளக்கண்ணாலுற்று நோக்கி அந்த சீஷரைப் பார்த்து "எனக்கு எதிர நில்லாதே! அப்பாலே போ சைத்தான்!" என்று அதட்டிக்கூறினார். இந்த உண்மையுணராத சீஷர் தன்னைத்தான் கோபித்ததாக நடுநடுங்கிப்போனார். அந்த மாயாமயக்கம் தீரவே பின்னுமவரைத் தாயிலும் மேலாக ஆதரித்து அன்புகூர்ந்து போற்றினார். எங்குபோனாலும் அவர் தான் பிரத்யகாத்மஸ்வரூபமாய் விளங்குவதைக் குறிப்பிட ஜனங்களுக்குப் பலவிதமாகச் சொல்லிக் காட்டினார். என்னசொல்லியும் ஏறவில்லை. ஒரு சமயத்தில் அக்காலத்து சமயவாதிகள் அவர்களுடைய ஆதிகுரவர் பேரைச்சொல்லித் துதித்தபொழுது "அப்ரஹாமுக்கும் முந்தி ஆதிமுதற்கொண்டு நான் ததாகாரமா யிருக்கிறேன்" என்று சொன்னார். அதையவர்கள் அறிந்துகொள்ளவில்லை. ஆத்மார்த்தமாக ஒரு காரியம்செய்தால் அதைப் பிரபஞ்சத்தார் உள்ளபடி யறிவதில்லைதான். ஸ்ரீ கிருஷ்ணபகவானும் கபிலர்முதலான மஹரிஷிகளுக்கும் உண்மையைப் போதித்தவன் நானே." என்று சொன்னபொழுது அர்ச்சுனன் மயங்கி, நீர் இந்த யுகத்தில் இப்போபிறந்தவர். அவர்கள் முன்யுகங்களில் இருந்தவர்கள். நீர் அவர்களுக்கு உண்மையைப் போதித்ததாகச் சொல்வது எப்படி? என்று கேட்டான். அப்பொழுது அவர் தான் சூரிய சந்திரர்களுக்கும் முந்தி ஆதிதொட்டு ஆத்மஸ்வரூபமாய் "அஹம்பத லக்ஷியார்த்தமாக" இருக்கிறதாகச் சொன்னார்.

அவதார புருஷர்களுக்கும் மற்றப்புருஷர்களுக்கும் வித்தியாசமென்னவெனில் நித்தமுத்தசுத்தாத்மா லோகரக்ஷணார்த்தம் நாமரூபப் பிரபஞ்சத்தில் நாமரூபங்களோடு தோற்ற (அவதாரமாக) நேருங்கால், அவர்கள் தம் ஸ்வரூபத்தை மறக்காமல், கர்ப்பத்திலிருக்கும்போது முதற்கொண்டு 'தேஹோஹம்' பாவனையின்றி, லோகரக்ஷணார்த்தம் வேண்டிய அளவுக்குமட்டும், மாயைவசப்பட்டவர்களாயின்றி, மாயையைத் தம்வசப்படுத்தி, அப்படி வசப்பட்டமாயையின் ஜாலத்தால் உபாதி ரஹிதமான ததாகார ஸ்வரூபத்தை உபாதி ஸஹிதமான நாமரூப பேதங்களோடு பொருந்தக்காட்டி, தாமரையிலை

யில் தண்ணீர்போலும், இருளில் ஒளிரும் மாணிக்கம்போலும், கர்மம், மாயை இரண்டும் தங்களை ஒட்டாமல் சங்கல்பமூலத்திரத்தால் கர்மஞ்செய்கிறவர்போலும், ஸம்ஸாரிகள்போலும் பிரபஞ்சத்தாருக்குத் தோற்றச்செய்து தாங்கள் கர்மபந்தவலையில் சிக்காதவர்களாயிருந்து உலகையாட்டிவருவார்கள். ஸ்ரீ கிருஷ்ணபகவான் அர்ச்சுனனைநோக்கி 'இந்த கௌரவசேனைகளை யெல்லாம் நான் ஏற்கனவே ஸம்ஹாரம் செய்துவிட்டேன். நீ பிரகிருதி வசத்தனாயிருந்து உன்கடமையைச் செய்யவேண்டியதொன்றின்றி "நான் கொல்கிறேன், நான் செய்கிறேன்" என்கிற அகம்பாவம் உனக்கு வேண்டா' மென்று சொல்லுகிறார். அருள் ஒருபக்கமிருந்தால் மருளும்கூடவே ஒருபக்கத்திலிருந்து தன்வேலையைச் செய்துவரும். பிரவிர்த்தி நிவிர்த்தி யிரண்டும்சேர்ந்து வேலைசெய்யாவிட்டால் பிரபஞ்சம் ஒழுங்குதப்பித் தலைகவிழ்ந்துபோம். பிரவிர்த்தி நிவர்த்தியிரண்டிலும் செய்பவன் "நானல்ல" ஈசுவரன்ஏவலால் அவன் கைப்பட்ட கருவியாயிருந்துகாரியமெல்லாம் நடக்கிறது; நான் சாக்ஷிமாத்திரமன்றி செய்கிறவனுமல்ல செய்விப்பவனு மல்லவென்று எவனொருவன் திடபாவனைகொண்டு அதை ஸ்வானுபவத்திலுறுதிப்படக்கண்டு அவ்வழியில் அசையாமல் நிற்கிறானோ அவனே அருளாளன், ஆத்மஞானி, அவதாரபுருஷன், அனுக்ரகவிசேஷன். இமைப்பொழுது இந்நிலை தவறினாலும் அவன் மோசம்போனான். ஸ்ரீராமபிரானும்மாயமானாக வந்த மாரீசனை, மாயாவியென்றறிந்தும் சீதையைச் சந்தோஷிப்பதற்காக லீலார்த்தமாக அதைப் பிடிக்கப்போக, அதனால் பெண்டாட்டியை யிழந்து திண்டாடிநின்று பிறகு அரும்பாடு பெரும்பாடு பட்டு அவளை மீட்கப்பெற்றாரென்றால், மற்றவர்கள் மாயைவசப்பட்டுழலக்கேட்பானேன். ஆனாலும் எந்த மஹாபுருஷனொருவன் இமைப்பொழுதும் தன்னிலை தவறாதிருக்கிறானோ அவனே மஹாதீரன், மஹாபுருஷன், மஹாயோகி, மஹாத்மா, சித்தன், முக்தன், உமைபாகன், உண்மை, ஸத்யம், எல்லாம்! இப்படி ஆனைக்குமடிசறுக்குமென்பதாக அவதார புருஷர்களும் மாயைக்குள்ளாவார்களானால் மாயையை வென்றவனாரென்று கேட்கில், அவர் தங்களது சங்கல்ப விசேஷத்தால் மட்டும் மாயா வசப்பட்டு அந்த சங்கல்பம் நிறைவேறியதும் ஸ்வாத்மாராமராயிருப்பர். அப்பொழுதும் அவர்கள் தங்கள் உண்மையை மறந்துபோகமாட்டார்கள். சங்கல்ப நிமித்தம் மறந்தவர்போல் பிறருக்குத் தோன்ற நடப்பார்கள்.

இப்பொழுது ருஷியாவுக்கும் ஜப்பானுக்கும் நடந்த சண்டை முடிந்து சமாதானமானால் அதுசம்பந்தமாக இத்தனை ஆத்மவிசாரமும் ஆத்மபோதமுமனென்று கேட்கலாம். நமது புராணங்களில் சொல்லிய தேவாசுரயுத்தங்களுக்குச் சரியாக இக்காலத்தில் ஏதாவது ஒரு போர் நடந்ததாகச் சொல்லலாமானால் அது இந்த ருஷியா - ஜப்பான் யுத்தமே! இந்த யுத்தத்தில் ஜப்பானியர்க்குற்ற ஜயமெல்லாம் அவர்களது ஸத்குணசங்கற்ப பலத்தாலன்றி (strength of character) வேறொன்றினாலுமில்லை. உள்ளபடி, தேகபலம், சைனியபலம், ஐசுவரியபலம், எல்லாம் ருஷியர்கள் பக்கத்திலேயேயிருந்தன. ஜப்பானியர் பக்ஷத்தில் பாண்டவர்க்கு ஸ்ரீ கிருஷ்ணன் சகாயம் செய்ததுபோல் அவர்களுடைய ஆத்மபுத்தியினாலுண்டான புத்தி யுத்தி சாமர்த்திய விசேஷத்தால் வாய்த்த சாதக சாதன சாத்திய விசேஷங்களால் மட்டும் அவர்கள் அற்புதமாக ருஷியர்களை ஜயித்துக்கொண்டுபோனார்களன்றி வேறொன்றினாலுமில்லை. இதற்கு அத்தாக்ஷி வேண்டுமானால், அவர்கள் உலகெல்லாம் புகழ்ந்து கொண்டாடும்படி ஜயசீலரான காலத்தும் தங்கள் அடக்கத்தையும் பொறுமையையும் சாந்தத்தையுமே மேலாக மதித்துப் பணத்தைத் திரணமாகஎண்ணி, இந்த சமாதானவுடன்படிக்கை செய்யச் சம்மதித்ததும், அது முடிவெய்திய காலத்து அவர்கள் சொந்தப்பிரஜைகளே மிதமிஞ்சிக் கலகஞ் செய்தார்ப்பரிக்க அதற்குமஞ்சாது, அவர்கள் செய்த களேபரத்தையடக்க துருப்புகளை யேவி ரணவீரவிருது நாட்டி (Proclaimming martial law) தற்பெருமையும் தமரழிவும் பாராட்டாது துஷ்ட ஜனங்கள் செய்த கொட்டங்களை யடக்கித் தலைநகரில் சமாதானத்தை நிலை நாட்டத்துணிந்ததுமாகிய இவ்விரண்டுமே போதும். இப்படி நேரிடுங்கலகங்களெல்லாம் மாஹாமோஹ மாயாசக்தியினாலுண்டாவதென்பதுண்மையாதலால், அறியாஜனங்களை அதிசமாக நொந்துகொண்டுநோவச்செய்வதில் பயனில்லை அவர்கள் கொட்டத்தை யடக்க வேண்டிய அளவு கண்டித மெத்துக்கொண்டு பிறகுஅதை மறந்து அவர்கள் தப்புகளை மன்னித்துவிடுவதே தர்ம ராஜாங்கத்துக்கழகு. கலி காலத்தில் கற்கியவதாரத்தைக் காண உளக்கண் பெற்றவர்கள் "காரணத்து மெய்ப்பொருளாய் கற்கிஸ்வரூபருமாய், அயக்ரீவ மூர்த்தி அவதாரமாகிவந்து"— இச்சண்டை முகத்தில் நின்று—"எல்லாம் விளங்க வைத்து ஏற்றபடி ரக்ஷித்த" "அந்தக் கற்கியவதாரத்தைக் கண்டே மகிழ்ந்திருந்தார்" என்று சொல்லத்தகும். அப்படி உளக்கண் பெற்ற ஒருவர் இச்சண்டை முகத்தில் விளங்கிய ஆத்மவிலாசத்தை மன்னி யுன்னிச் சிந்தித்துச் சமாதான முண்டான காலத்திலுடனே யுட்கலகமுண்டானதை யுன்னி, இது மாயைசெய் காரியமென்றுணர்ந்து, அஜ்ஞானர்களான பாமரரைப் பிடித்த கலகப்பேய் காலக்கிரமத்தில் அழிந்தொழிந்துபோமென்று ததாகாரமாயிருந்து அவர் சிந்தித்ததை இங்கிலீஷில் வாய்க்குவந்ததோர் அருட்பாவாக வமைத்து நமக்கனுப்பி யுள்ளதைக் கீழே பிரசுரிக்கிறோம். ஆசா பிசாசு பிடித்தாடும் அவித்தியாரூப பேதசக்தியாம் மாயையை 'சைத்தான்' என்றும், அது 'பறவைநாகம்' ரூபமாகவந்து ஆதிமனுஷியை ஆசைவலைப் படுத்திற்றென்றும் சொல்வதுமேற்றிசையில் வழங்குமோர் ஐதிகம். 'Uncle Sam'—என்பது அமெரிக்காவுக்கு வந்ததோர் இடு

குறிப்பேர். 'Anglia'—ஸிம்மக்கொடியை யுடைய சக்தி ஸ்வரூபமான இங்கிலாந்துக்குரியதோர் பண்டைப்பேர். "Guardian Kite"—என்பது இரண்டருத்தம் கொள்ளும். பஹிர் முகத்தில் அமெரிக்காவின் த்வஜமான கருடக்கொடியையும், ஸ்ரீ கிருஷ்ணனது வாஹனமாகிய கருடனையும் குறிக்கும். விபூதி விசேஷத்தால் பரமாத்மாவாகிய ஸ்ரீ கிருஷ்ண பகவானையே குறிக்கும். "பக்ஷிகளுக்குள்ளே பகர் கருடன் நாமாமே" என்று பகவான் கீதையில் தனது விபூதி மகிமையைச் சொல்லுங்கால் தாமே சொல்லியிருக்கிறார்..

## "PEACE AT LAST!" *

*[Uncle Sam to Anglia's New Ally.]*

உ

ஓம் ஸ்ரீ

**கருடவாஹன குருகடாக்ஷவீக்ஷண்யப்ராப்தரஸ்து.**

## "THE TEMPTATION"—A NEW VERSION.

*"Get thee behind me Satan!"—Jesus Christ.*
*"Before Abraham was I am."—Ibid.*

He that preaches "Truly, the heart is Evil,"
Be sure, My Child, he's certes the Devil!
Take thy dragon form away fr'm here' Satan!
Or ' will set the GUARDIAN KITE on thee to fatten.

"I know thou canst quote scripture
"And artfully enough picture
"Falsehood as truth to capture
"Unwary souls by 'rapture'."

Talk'st thou evil one! of "sin and swift retribution"!
Sure! thou wilt have it meted out in God's distribution.
Till then flourish in thine own Evil way
But beware! 't's well thou get'st thee soon away!

—*Garudavâhanah.*

* *Vide* London Telegrams of September 7th, and 14th, *re* the Treaty of Peace and Serious Anti-Peace Riots at Tokio, and Yokahama.

## INDIAN FOLKSONGS OF TRUTH AND WISDOM.

### THE FOLKLORE CONCERNING THE TEMPLE AT TRIVENDRAM.

*(From R. S. Subbalakshimi Ammal.)*

## அனந்தங்காடு ஸ்ரீவாங்கள் என்கிற சந்நியாசி செய்தபூஜையும், அனந்தபத்மநாபர் ஸ்தோத்திரமும். ஸ்ரீவாங்கள் சரித்திரம்.

இந்த அனந்தங்காடு என்கிறப் பாட்டில் மலையாளத்தில் திருவனந்தபுரமென்கிற ஸ்தலத்தில், எழுந்தருளியிருக்கும், ஆதிமூலப்பொருளாகிய ஸ்ரீ அனந்தபத்மநாப ஸ்வாமியின் சயனமும், அவர் அங்குசயனம்பண்ணக் காரணமாக இருந்த ஸ்ரீவாங்கள் என்கிற சந்நியாஸிசரித்திரமும் இதில் விளங்குகின்றது. ஸ்ரீவாங்கள் என்பவர் விஜயநகரவாஸியென்றும் ஜாதியில் மாத்துவப்பிராமணரென்றுந் தெரிகிறது. இவர் வெகுகாலமாய் ஸ்ரீமகாவிஷ்ணுவைக் குழந்தைரூபமாக (தேவகி தேவியார்க்கு புத்திரனாகப்பிறந்த பாலகோபால வடிவத்தை) தெரிசிக்கக்கண்டு நேத்திரானந்தமடைய எண்ணி வெகுகாலமாய் பூஜாமுகத்தில் தியானம் பண்ணிக்கொண்டுவந்தார். இப்படியிருக்கையில் ஒருநாள் பூஜைக்காலத்தில் தியானத்திலிருக்கும்பொழுது, பகவான் அவரீ பீஷ்டம் நிறைவேற்ற எண்ணிக் குழந்தைரூபத்துடன் சர்வாபரண பூஷிதராய் கண்டோர்மனம் ஆனந்தபரவசமாக கோலாகலமாகக் கூத்தாடியும் மழலைச்சொல்லால் செவிக்கு இன்பத்தை உண்டாக்கியும் விளையாடிக்கொண்டே சந்நியாசியை ஆலிங்கனம்செய்து மடிமேலும் ஏறினார். ஆனால் ஸ்ரீவாங்களுக்கு தியானத்தில் சிந்தைலயித்திருந்ததினாலேயோ அல்லது ப்ராரப்தகர்மம் தீராததினாலேயோ திவ்யமங்கள விக்கிரகமாகிய இந்தப்பால கோபாலர் திருவடிவைக்கண்டு நேத்திரானந்தமடையும் பூரணதபம் செய்யாமையாலோ, மூடின கண் திறக்காமலே மடியில்ஏறின குழந்தையை புறங்கையால் தள்ளி, பூஜாக்காலத்தில் இடையூறுசெய்யாதே என்றும், சும்மா இருந்தால் பிறகு பழம் தருவதாகவும் சாதாரணக் குழந்தைக்கு சொல்லுவதும்போலச் சொல்ல, பகவானாகிய அந்தக்குழந்தை தன்னைப் புறங்கையால்தள்ளி அதட்டி, "எட்ட இரு" என்ற சொல்லைப் பொறாமல் தன்மழலைச் சொல்லால் தபஸைநிறுத்தென்றுச் சொல்லியும், இவரால் தள்ளப்

பட்ட இந்தக்குழந்தை வடிவை இனி 'இவர் என்ன கெஞ்சினாலும் காண்பிக்கிறதில்லை என்ற எண்ணத்தோடு, தான்வந்த ஜாடையைத்தெரிவிக்க மின்னல்போல தன் உருவைக்காட்டி மறைந்து, இனி உன்க்கு அனந்தங்காட்டில் தெரிசனங்கொடுக்கப் படுமென்று அசரீரீ வாக்காகச்சொல்லி அவர் பின்னும் தான்முன்னுமாக தான்நடந்துபோகும் சந்தடியைக் காட்டிக்கொண்டே அனந்தங்காட்டுக் கழைத்துப் போய்ப் புருஷோத்தமராகிய பகவான் (தான்) பெரியரூபத்தோடு சயனம்பண்ணி சந்நியாசிக்கு தெரிசனம்கொடுத்து முக்தி கொடுத்ததாகப் பாட்டின் தாற்பரியம். சயனம்பண்ணின காலத்தில் மூன்று ஊருக்கு சரியாக இருந்த பகவானின் முன் ஆகிருதி குறைந்துமூன்றுவாசற்படியளவாகக்குறுகிவிட்டது. இப்பொழுதும் திருமுடியின் தெரிசனம் முதல் வாசற்படியாலும் திருநாபிக்கமல தெரிசனம் இரண்டாவது வாசற்படியாலும் திருவடியின் தெரிசனம் மூன்றாவது வாசற்படியாலும் காண்பிக்கப்படுகிறது. மூன்றுவாசற்படியுள்ள கற்பக்கிரகத்தில் பெரிய ஆகிருதியான உருவத்தோடு சயனம்பண்ணிக்கொண்டிருக்கிறார். இப்பொழுதும் சந்நியாஸி பூஜையும் பால்பரமாந்ந நெய்வேத்தியமும் மிகவும் விமரிசையாக நடந்துக்கொண்டிருக்கிறது. வெகுகாலமாய் பெரியோர்களால் உருப்போட்டுப் பாடிக்கொண்டுவந்த இந்தப்பாட்டை கவனம்பண்ணினவர்கள் யாரென்றும் தெரியவில்லை. இப்போது சிலருக்குத்தான் இந்தப்பாட்டு தெரிகிறது. திருவனந்தபுரத்தின் மகிமைபோன்ற இந்தப்பாட்டின் வாக்கியத்தைக்கொண்டு பகவானுடைய லீலையும், பக்தியும், அதனால் மனதிற்கு உண்டாகும் ஆனந்தமும் அடைவதோடு கதையையும் அறியலாமென்றும், எல்லாருக்கும் பிரயோசனப்படலாமென்றும் கூடியவரையில் அனேகம்பிழைகளைத்திருத்தி எழுதப்பட்டிருக்கின்றது. இந்தக்கதையை ஒட்டி இன்றைக்கும் எந்த வேலையில் நாமிருந்தாலும் குழந்தைகள்வந்தால் (நம்மகுழந்தைகளில்லாமல் வேறு எந்தக்குழந்தைகளா யிருநதாலும்) அதைப் பிரும்மஸ்வரூபமாக எண்ணி எடுத்துக்கொண்டாடவேணும்: கோபத்தோடு குழந்தையைத் தள்ளலாகாது என்றும் பூஜைக்கு வைத்திருக்கும் எந்தவஸ்துவாக விருந்தாலும் குழந்தைகள் கேட்டால் கொடுக்கவேண்டுமென்றும் குழந்தைகளும் தெய்வமும் சரியென்றும், குழந்தையும் தெய்வமும் கொண்டாடுவாரிடமென்றும் எற்படுகிறது. முக்கியமாய்க் குழந்தைகளை வேறுவிதமாகக் கோபித்தாலும் கோபிக்கலாம். புறங்கையால் மட்டும் தள்ளக்கூடாதென்றும் எல்லாரும் சொல்லுகிறார்கள்.

ஓம் தத்ஸத்.

(1-வது-மெட்டு என்பது-பள்ளுராகம்.)

## அனந்தங்காடு ஸ்ரீவாங்கள் என்கிற சந்நியாசி செய்தபூசையும் அனந்தபத்மநாபர் ஸ்தோத்திரமும்.

(1-வது-மெட்டு.)

சிந்தைத்திடங்கொண்ட ஸ்ரீவாங்களும்
ஸ்ரீகிருஷ்ணன்தனைப் பூஜித்ததை
பரிவுடனிந்தக் கதைநடத்த
பக்தியுடனுமை புத்திரனே
தும்பிமுகத்தோனே கணபதியே
சிவந்தகனிபழந் தேங்காயும்
தப்பாமலேநான் படைத்திடுவேன்
சக்திகணபதி முன்னடவும்!

அனந்தபுரத்தானின் திருமருகா
ஆதிசிவனார்க்குப் புத்திரனே
தினந்தோறும் கனிமோதகமும்
சீடை செவ்விளநீர் படைப்பேன்
ஆனந்தங்காட்டிலே ஆதிமூலம்
அன்றுநடத்திய லீலைசொல்ல
(என்) மனந்தன்னில் வந்து முன்னடவும்
மயில்வாகனர்க்கு மூத்தவரே!

நாவில்நிலைக்குமென் தாயாரே
நான்முகவர்க்கு தேவியரே
பாரேழுங்கீர்த்தி மகவிளங்க
பத்மநாபராய் உதித்துவர்தன்
சோபைசொல்லவே முனனடவும்
ஸரஸ்வதி உன்னைமறவேனே
கர்மபந்தங்கள் தானொழிந்து
கலியுகம்விட்டு ஈடேற!

நூல்.

நன்மையானந்த ஸ்ரீவாங்களும்
நல்லவிஜய நகரந்தனில்
ஜென்மஜென்மந்தோறும் பூஜித்து
ஸ்ரீவாங்கள்பூஜை பண்ணலுற்றார்.
சங்கம்பூஜித்து ஸ்ரீவாங்களும்
சதுர்வேதக்கோடி மந்திரத்தால்
பிங்கலைதன்னிலிடைநிறுத்தி
பிரணவமூர்த்தியை உச்சரித்து,
எங்கும் ஓடாமல் வாயுவை
இந்திரியங்களை உள்ளடக்கி
அங்கு அஷ்டாங்க யோகத்தினால்
அஷ்டாக்ஷரத்தினால் ஆராதிப்பர்.
சங்கையறநின் றாராதித்து
தியானம் பண்ணியே ஸ்ரீவாங்களும்
கண்களித்திடும் பாலரூபக்
கண்ணமூர்த்தியை சிந்தைபண்ணி
சங்கபூஜை கலசபூஜை
ஸர்வாந்தர்யாத்மா பூஜைசெய்தார்.

எங்கும்நிறைந்திடும் ஆத்மாவை
ஏகரூபமாய் தியானஞ்செய்தார்.
பங்கஜப்பாதம் மனதில்வைத்து
பக்தியுடன் கண்ணைமூடிநின்றார்.
மங்களமான ஸ்ரீகோபலர்
வந்து அவர்முன்னே தோன்றினரே.
தோன்றும் கோபாலர் திருவடிவைச்
சொல்லமுடியாதொருவாலே
பூரண சந்திரன் போல்முகமும்
புண்டரீகமலர்க் கண்களும்
தாழ்ந்த கிண்கிணி அரைவ்டமும்
சதங்கைகொஞ்சி சலுஞ்சலுங்க
ஆனதிருவிரல் கழல்மோதிரம்
ஒடிச்சிதறவே நிர்த்தஞ்செய்தார்.

நிர்த்தஞ்செய்கின்ற சேர்வைகண்டு
நித்தியபக்தர்கள் கண்குளிர
முத்துமாலையும் தோளசைய
முகஞ்சிவந்துமே வேர்த்’ததும்ப
மற்றும்வார்காதுப் பணிகுலுங்க
விசாலநயனங்கள் சுழன்றுவா
கொத்துத்துளவியும் வேர்க்கொழுந்தும்
குலுங்கியேநின்று பரிமளிக்க
தத்தித் தத்தியவர்நடந்து
தங்கிச்சப்பாணி கொட்டுவராம்.
நித்தியானந்தரூபரங்கே
நிர்த்தங்குதித்தாடத் துவக்கினரே!
சமஸ்தலோகத்தின் சாக்ஷியாகி
ஸர்வாந்திரியாத்மா நானே என்று
விருத்தராகிய ஸ்ரீவாங்கள்முன்
விளங்கும் ரூபத்தைக்காட்டினரே!
செவந்த கனிவாயில் அமிர்தம்சிந்த
சொர்ணச்சிலம்பார்க்க பதஞ்சிவக்க
வருந்தியேபோற்றும் மறையோர்முன்னே
மகிழ்ந்துமாதவர் நிர்த்தம்செய்தார்!
பச்சைமணியுடன் பதக்கந்தாழ
பணிகள்குலுங்கியே பளபளென்க
அஞ்சனக்கண்ணும் வார்காதும்
அழகாய்த்திருத்திய குழல்கத்தையும்
கொஞ்சும் கனிவாயின் பழலைச்சொல்லும்
கோமளமான தளர்நடையும்
தஞ்சமென்றங்கே வந்தபாலன்
தட்டுமோதிரங் கையிற்சூழ
அஞ்சேல்என்றகை வெண்ணெய்சோர
ஆயன்குதித்தாடத் துவக்கினரே!

சொர்ணபதக்கமும் கௌஸ்துபமும்
துய்யக்கழுத்திலே ஜோதிவிட
ஸ்தம்பமாகியோர் பொருளுமாகி
தரணிமுழுதிற்கும் நாதனாகி
இன்பமாகுமோர் பொருளுமாகி
இருளில்லாப்பதம் இதுவே என்று
நம்பினபேரை அஞ்சேல் என்கும்
(என்) நாதன் குதித்தாடத் துவக்கினரே!

முத்துக்கடுக்கனும் இடைநடுவில்
ரெத்னமாணிக்கக் குண்டலமும்
ஒத்தும்கையிலே ஒளிதிகழ
சித்திரக்குழல் சுருண்டசைய
அத்தன் கோபாலன் சோதைமைந்தன்
ஆதிபழம்பொருள் பாலராகி
நித்தம்தபஞ்செய்யும் ஸ்ரீவாங்கள்முன்
நிருத்தம்குதித்தாடத் துவக்கினரே!

அடியாரிடத்திலே கிருபைபெருக
அளிசந்தனத்தோடே பொடியுதிர
கமலக்கையிலே கனகவளை
களித்தாடும்போது கழன்றுவிழ
வெளியாகி எங்கும் இருள்நீங்கி
விஸ்வரூபர் எதிரில்நின்று
நெடியதிருமேனிதனை யொடுக்கி
நிருத்தம் சுவாமியும் ஆடினரே!

அகிலாந்தகார இருள்நீங்கி
அகிலம்பெருவெளி யானாற்போல்
இருகரத்துடன் பதங்குலுங்க
நவசந்திரக்காந்தி ஒளிதிகழ
தருவேன் தருவேன்நான் தற்பதத்தை
உம்தபஸைநிறுத்தென்று சொல்லுவார்
[போல்
இருமைப்பயன்தரும் கிருஷ்ணராயர்
ஒருபாதம்தூக்கி ஆடினரே!
சுகுர்தியாகிய ஸ்ரீவாங்கள்முன்
சொன்னவார்த்தையை நிலைநிறுத்த
சுகிர்தம்தந்தோமென் றாடினரே
செம்சிலம்பு சிலம்புகொஞ்ச!

கோடிசூரியன் கூடிவந்து
கோபாலராகி யுதித்தாற்போல்
பாலரடிக்கையில் வளைகுலுங்க
பங்கஜப்பாதம் தான்சிவக்க
ஒடியுலாவும் முழியழகும்
உன்னிதமூக்கும் ஒளிபெறவே
நாடியே சித்தடியைதூக்கி
(என்) நாதன் குதித்தாடத் துவக்கினரே!

பூரணர் ஆடினதிருக்கூத்தை
பக்தியுள்ளவர்பஜித்தவர்க்கு
தப்பாமல்பாதந் தருவேனென்று
திருச்சங்கபாணியும் நிருத்தஞ்செய்தார்!
பிறகே சென்றவர் தோளைக்கட்டி
பின்னே ஒளித்தவர் முன்னே நிற்பர்
ஆதிமூலப்பொருள் ஆனபாலன்
அவர் மடிமேலே மதித்தேறுவர்.
மீண்டும் அவர் மேலே சாய்ந்தாடுவர்
சற்றேகடைக்கண்ணால்கிருபைபொழிவர்
(தன்) திருமுகத்துடன் அவர்முகத்தை
சேரவே வைத்துத் தழுவி நிற்பர்
திரும்பவும் மந்த ஹாசத்துடன்
தெண்டெடுத்தவர் தோளில் வைப்பர்

மணிபவழவாய் நகைத்தே நிற்பர்
வைத்த சிவலிங்கந் தனை எடுப்பர்
சரியில்லாத திருக்கையினல்
சாளிக்கிராமத்தை வாயில் வைப்பர்.
கருவறுத்திடும் கமலக்கையால்
கமண்டலதீர்த்தம் கவிழ்த்தே நிற்பர்.
அமரர்போற்றிடும் ஆதிவஸ்து
அறியாமாணிடச் சிறுபிள்ளைபோல்
சபலமாகிய ஸ்ரீவாங்கள் முன்
சகல லீலையுங்காட்டினரே.

இருபத்தோரு ஜென்மம் இவரும் நம்மை
யிப்படிக்காண வருந்துவதால்
மதித்தேன் உம்மிட மாதவத்தை
மாற்றுந்தியானத்தை நிறுத்துமென்றார்.
திரும்பவும் மந்த ஸ்ரீவாங்கள் முன்
செய்யும் தியானத்தை நிறுத்துமென்றார்.
காரணர் சொல்லியும் கேளாராம்
காண்ட வஸ்துவைப்பாராம்
ஆனந்தந்தனில் மூழ்கியவர்
அதிதபிர்மத்தில் லயித்திருந்தார்.

ஞானப்பொருளான தத்வத்தை
சற்றுங்கணியாமல் இருப்பதினல்
பூர்ணகிருபையுடன் சுவாமி பின்னும்
(அவர்) புத்தி கலங்கவே மாய்கை ஏவி
ஆனமாதவம் தனை நீக்கி (சுவாமி)
ஆனந்த நிருத்தம் ஆடலுற்றார்.
பாடுங்கனிவாயில் அமிர்தம் சிந்த
பங்கஜக்கையின் திருஆழி மின்ன
சூடும் வனமாலை மார்பில் தாழ
சுருண்ட மயிர்க் கீழேசுட்டி மின்ன
வாடாமலரெங்கும் உதிர்ந்துசிந்த
வண்ணக்கிண்கிணி மருங்கில் கொஞ்ச
தேடக்கிடைக்காத சித்தடியால்
ஸ்ரீவாங்கள்வைத்த தீர்த்தமெல்லாம்
ஓடிக்கவிழ்த்துமே விளையாடி
ஓங்காரரூபர் கொக்கரித்து
ஆடிஅவர்வைத்த மலரிறைத்து
ஆலிங்கனம்பண்ணி ஸ்ரீவாங்களை,
மாலைச்சந்தனம் மல்லிகைப்பூ
மணங்கள் அவர்மேலே பரிமளிக்க
பாலகரந்த ஸ்ரீவாங்களின்
பக்தர்மடிமேலே ஏறிநின்றார்.
பக்திசோதிக்கும் பரமரப்போ
பக்தன் பங்கஜக்கைபிடித்தார்.
பித்தங்கொண்டாப்போல் ஸ்ரீவாங்களும்
புறங்கையால்தள்ளிப் புரக்கணித்தார்.
நித்தியமென்று அறியாமல்
நின்றசிறுவரைக் கடிந்துரைப்பர் :

புத்தியறியாத பாலகனே
போற்றும்நாதனைத் தொடுவீர்களோ!
எச்சில் அறியாத கண்மணியே
இங்கனேசெய்தால் என் செய்குவேன்!
ஒற்றிவிளையாடி நின்றீரானல்
உச்சிதமான பழந்தருவேன்! (என்று)
உத்தாரம்ஸ்ரீவாங்கள் சொல்லலுமே
ஓங்காரமூர்த்தி மனம் வெறுத்து
சட்டென்றுமே அவர் தான் விலகி
சர்வாபரணங்கள் தானசைய
பொட்டென்னச்சென்று பளிச்சென்றங்கே
பொன்னுங்குண்டலம் ஜோதிவிட
மட்டில்லாத கபோலஸ்தலம்
வட்டக்கண்ணாடி போலமின்ன
செம்பவழம்போலு மதரத்துள்ளே
சின்னப்பல்லொளி நிலாவெரிக்க
மெத்தவேமின்னும் நவரத்னத்தில்
விளங்கும் சிறுமுத்து பதித்தாப்போல்
செம்பவழக்கனி வாய்திறந்து
ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி ஏதுரைப்பர்!
யோகியின் சிந்தையில் வசிக்கும் நாதன்
உகந்து பக்தர்மேல் கிருபையுடையோன்
கோபிநாதன் குழந்தைரூபன்
கொஞ்சியே ஒரு வார்த்தைசொல்வர் :
(நீர்) சுத்தமுடன்வைத்து பூஜைபண்ணும்,
(நான்) தொடுவதில்லைஉம்சிவலிங்கத்தை
(நீர்) எத்தனையோகாலம் வருந்தினீரே
இங்கேவந்து நான் லீலைசெய்ய
ஒத்தி இருவென்ற ஸ்ரீவாங்களே
உம்முடைவார்த்தையை மறவேன் நான்.
மத்தனாகிய மனதோரே
மலையாளந்தன்னில் அனந்தங்காட்டில்
பக்தி அறிந்துபின்னே வருவோம்
பார்க்கலாமென்றும் பரமன்சொல்லி
சத்தே தம்முடை சாயல்காட்டி
சந்திரன்வந்து மறைந்தாப்போல்
வித்தைகாட்டிய பேர்களைப்போல்
மின்னல் மின்னி மறைந்தாப்போல்
அத்தன்கோபாலக் கிருஷ்ணராயன்
அந்தர்த்தானம்பண்ணி அகலநின்றார்.

ஸ்ரீவாங்கள் தானும் கண்விழித்து
திடுக்கிட்டு அவரைப்பார்ப்பளவில்,
சிதறியே அங்கே பூமலரும்
ஸ்ரீதுளசிவனமாலைகளும்
உதறியே பூஜா திரவியமும்
உந்நதமான சித்தடியழகும்
பெருமான் வடிவமும் காணமல்
பெருமூச்செறிந்து பிரமைத்து நின்றார்.

(இன்னும் வரும்.)